

WWW.AKARAM.EU

இலவச தமிழ் மாத இதழ்

AKARAM

# அகரம்

14. ஆவணி - 13. புரட்டாதி 2011

சுவடி: 04 திருவள்ளுவர் ஆண்டு 2042 கர வருடம்

B5 039

**FREE Magazine**



## 13வது திருத்தச் சட்டம்!

**காணிகள் காவல்துறை கிடைத்தாலும் தமிழினம் தானாகத் தேடும் புதை குழி!**

FREE CIRCULATION:

Germany, Switzerland, France, England, Denmark, Norway, Holland, Sweden, It...



# உள் நாட்டு, வெளி நாட்டு அழைப்புகள் 6 öre யில் இருந்து

# Lycamobile டென்மார்க்



| | வீட்டு தொலைபேசி | கைத் தொலைபேசி |
| --- | --- | --- |
| அவுஸ்ரேலியா | 0.06Kr /min | 0.94Kr /min |
| இலங்கை | 0.58Kr /min | 0.78Kr /min |
| இந்தியா | 0.06Kr /min | 0.09Kr /min |

| | |
| --- | --- |
| வெளி நாட்டு குறுந்தகவல் (SMS) | Kr 0.99 |
| உள் நாட்டு குறுந்தகவல் (SMS) | Kr 0.18 |
| Lycamobile லில் இருந்து Lycamobile க்கு குறுந்தகவல் (SMS) | Kr 0.09 |

| | வீட்டு தொலைபேசி | கைத் தொலைபேசி |
| --- | --- | --- |
| கனடா | 0.29Kr /min | 0.29Kr /min |
| ஐக்கிய ராஜ்ஜியம் | 0.06Kr /min | 0.99Kr /min |
| சுவிட்ஸர்லாந்து | 0.06Kr /min | 2.29Kr /min |

தங்களது தற்போதைய கைத்தொலைபேசி எண்ணை Lycamobile க்கு மாற்றி 200Kr பெறுமதியான நிமிடங்களை இலவசமாக பெற்றிடுங்கள்!

Lycamobile லில் இருந்து Lycamobile க்கு

*இலவச அழைப்புகளை பெற்றிடுங்கள்

மேலதிக விபரங்களுக்கு

www.lycamobile.dk 70 14 55 56

*லைக்காமொபைலில் இருந்து லைக்காமொபைலுக்கு 30 நிமிடங்கள் இலவசமாக பேசி மகிழலாம். அடுத்து வரும் ஒவ்வொரு நிமிடங்களுக்கும் வழமையான கட்டணம் அறவிடப்படும். இணைப்புக் கட்டணமாக 0.99Kr அறவிடப்படும்.

*சலுகை கட்டணங்கள் கால வரையறைக்குட்பட்டவை. மேலதிக விபரங்களுக்கு www.lycamobile.dk



Lyca mobile

Call the world for less

Lycamobile வாங்கக்கூடிய இடங்கள்:



# SHELVA ZUG

KREDIT & IMMOBILIEN




TEL: 041 790 64 63




KREDIT
வங்கிக்கடன்
(5.9% இலிருந்து)

★ வெளிநாடுகளிலிருந்து வருபவர்களுக்கான மருத்துவக்காப்புறுதி

★ ஆயுட் காப்புறுதி ★ வாகனக் காப்புறுதி (30% இருந்து) ★ வீட்டுக் காப்புறுதி

★ மருத்துவக் காப்புறுதி ★ இலவச சட்டத்தரணிக்கான காப்புறுதி

## SHELVA ZUG GmbH

BIRKENMATT 23, 6343 ROTKREUZ

TEL: 041 790 64 63 TEL: 041 790 64 66
FAX: 041 790 64 68 NAT: 079 514 64 28

WEB: www.shelvazuggmbh.com
E-MAIL: shelvazuggmbh@bluewin.ch

★ புதியவீடு கட்ட
★ பழைய வீடுகள் திருத்த
★ கட்டிய வீட்டை வாங்க




★ கடைகள், RESTAURENTகள்
வாடகைக்கோ,
வாங்கவோ எம்மை நாடலாம்

புதியவீடு கட்ட
எம்மை நாடலாம்

**tMedia Network**
நிறுவனத்தின்



# அகரம்

மாதாந்த இதழ் - Monthly Magazine

ஆவணி - புரட்டாசி 2011 | August - September 2011
சுவடி 04 | Issue 04

தலைமை ஆசிரியர்:
திரு. தூயவன்

உதவி ஆசிரியர்:
திரு. வன்னித்தம்பி

உள்ளடக்கப் பொறுப்பாளர்:
திரு. த. இரவீந்திரன்

ஆசிரியர் குழு:
திரு. பவித்திரன் (இலங்கை)
திரு. ஆதவன் (இலங்கை)
திரு. வண்ணை தெய்வம் (பிரான்ஸ்)
திரு. எதிர்மன்னசிங்கம் (சுவிஸ்)
திரு. சண் தவராஜா (சுவிஸ்)
திரு. வி. சபேசன் (ஜேர்மனி)
திரு. அறிவழகன் (ஜேர்மனி)
செல்வி. தணிகா சுப்பிரமணியம் (ஜேர்மனி)
திரு. அனலை நிதிஸ் ச. குமாரன் (கனடா)

தொடர்புகளுக்கு:
Tel: 00 49 23 81 98 77 897
Fax: 00 49 23 81 97 25 556
Email: editor@akaram.eu

www.akaram.eu

No part of this publication may be reproduced, copied or transited in any form or by any means or stored in any information storage or retrieval system without the publisher's written permission.



©tMedia Network 2011.
All rights reserved.

## நுழைவாயில்...



அகரம் வாசகர்களுக்கு வணக்கம்!

உங்கள் கரங்களில் தவழும் அகரம் சென்ற இதழ் போல் இம்முறையும் சிந்திக்கத் தூண்டும் வகையில் முகப்பு அட்டை இருப்பதைக் காண்பீர்கள். இது போல் வாசகர் தரும் ஆக்க பூர்வமான விமர்சனங்கள் கண்டனங்கள் என்பன அகரம் மேலும் பொலிவுற உதவும்.

கருத்தாழம் மிக்க கட்டுரையாக 13வது திருத்தச் சட்டம் பற்றிய திரு.எம்.சி.எம் இக்பால் அவர்களின் ஆங்கிலக் கட்டுரையின் சில பகுதிகளைச் சுருக்கமாகத் தருகிறோம். தமிழர் தமது அரசியல் கோரிக்கை பற்றிய உண்மைநிலை சரியாக வகுக்கப்படுவது கட்டாய தேவை என்பதைக் கட்டுரை உணர்த்துகிறது.

இன்று உலகம் எங்கும் ஊழல், இலஞ்சம், ஒழுக்கக் கேடு, போர், பஞ்சம் பசி, உயிர், உடமைகள் அழிப்பு அனைத்தும் தலை விரித்தாடுகின்றன. இவை அனைத்தையும் தருகின்ற அரசியலையும் அதிகாரத்தையும் பணமே தீர்மானிக்கிறது. பணம் உண்மையின் அழிவிலும் பொய்யிலும் பிறக்கின்றன.

உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்று இருந்தாலும் நிலத்தின் விளைச்சல், அதன் பயன் உழுபவனுக்குக் கிடைப்பதில்லை என்பதே உண்மை. நிலத்தின் பயனை அவனால் அனுபவிக்க முடியாத போது நிலம் யாரிடம் இருந்தால் என்ன? ஈழத் தமிழர் நிலையும் இன்று அப்படித்தான் உள்ளது.

இப்படியான உண்மைகளை அகரம் பேசத் துடிக்கிறது, தமிழினமும் பேச வேண்டும் என ஆர்வமாகத் தவிக்கிறது. இதனால் நாம் உண்மைகளை மூடி மறைத்து மலினப்பட்ட தேசிய அரசியலை நடத்துவோருக்கும் அவர்களுக்குப் பின்னால் உள்ள அரசுகளுக்கும் எதிரிகளாக இருக்கிறோம்.

எம் இனத்துக்கு நடந்ததும் நடந்து கொண்டிருப்பதும் இன அழிப்புப் போர் என்ற உண்மையைக்கூட வாய்விட்டுச் சொல்ல முடியாத படிக்குத் தமிழினத்தின் குரல் வளையான தமிழர் தேசியக் கூட்டமைப்பு நசுக்கப் பட்டுக் கிடக்கிறது. இந்த உண்மையை உலகறிய அவர்கள் வெளியே கூறாது தப்பித்துக் கொள்கின்றனர். அவர்கள் கூற முன்வராத குற்றச்சாட்டை புலம்பெயர் சமூகத்தால் வலுவாக முன்னெடுத்துச் செல்ல முடியவில்லை. இன அழிப்புக் குற்றச்சாட்டை முன்னெடுப்பதன் மூலமே தமிழரின் தேசியம் தன்னாட்சி உரிமை கொண்ட நிரந்தரமான அரசியல் தீர்வை அடைய முடியும்.

ஆக்கங்கள் வடிவமைப்புகள் அனைத்துமே சமூக ஆர்வலர்களின் தொண்டாக கிடைக்கிறது. அச்சிடவும் அவற்றை 9 நாடுகளுக்கும் விநியோகம் செய்யவும் ஏற்படும் பணத் தேவைக்கு நிறைவான விளம்பர ஆதரவு மிக அவசியமாகும். வாசக அன்பர்கள் தமக்குத் தெரிந்த வர்த்தகர்களிடம் எமக்கான விளம்பரத் தேவைக்கு உதவுவதன் மூலம் நாம் எம் பணியைத் சிறப்பாகத் தொடர முடியும். அகரம் தமிழரின் சமூக பொருளாதார அரசியல் பண்பாட்டுக் குரலாக மிளிரத் துடிக்கிறது. அதில் வாசகர் குரலும் ஆதரவும் அவசியம் என்பதால் உரிமையோடு கேட்கிறோம்.

நன்றியோடு மீண்டும் இணைவோம்!...
அகரம் குழுமம்.

# உள்ளே...



## சிறப்புப் பகுதிகள் - Features




Advertise Your Product or Service with us.

ENJOY A WIDER COVERAGE WHEN YOU ADVERTISE WITH US.

உங்கள் விளம்பரங்களை பதிவுசெய்ய:

Tel: 00 49 23 81 95 66 09 Mobile: 00 49 1 51 11 557 890

ad@akaram.eu



அகரம்

FREE MAGAZINE:

GERMANY, SWISS, FRANCE, ENGLAND
NORWAY, DENMARK, SWEDEN, HOLLAND, ITALY





# வெளி உறவு அமைச்சர் லக்ஷ்மன் கதிர்காமரைக் கொன்றது புலிகளா?

த.எதிர்மன்னசிங்கம்

**பழி ஓரிடம் பாவம் இன்னொரு இடம்!**

**முக்கிய கொலைக் குற்றவாளி ஜனநாயக மக்கள் முன்னணியின் செயலாளர்! கொலைக் குற்றம் எங்கோ இருக்க பழியும் பாவமும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மீதும் தமிழ் மக்கள் மீதிலுமா?**

இந்தக் கேள்வி சில ஆய்வாளரது மனதில் முன்பே எழுந்துள்ள ஒன்றுதான். ஆனாலும் கூட்டத்தோடு கோவிந்தா போடும் எம்மவரின் எண்ணிக்கை அதிகமாகிப் போனதால், பொய்களும் பொய்யோடு கூடிய எதிரிகளின் பிரச்சாரங்களும் எமது இனத்தின் மீதான பழிகள் குவிந்து பெருகவும் உலகமே எம்மைப் பயங்கரவாதிகள் ஆக்கிப் பழிவாங்கவும் நாமே இடம் அளித்து வருகிறோம்.

அண்மையில் கொழும்பு உயர் நீதி மன்றத்தில் இலங்கையின் புலனாய்வுத் துறை வெளி உறவு அமைச்சர் கதிர்காமரின் கொலை வழக்கின் முக்கிய குற்றவாளி பொலிசாருக்கு அறிவிக்காமலே வெளி நாட்டுக்கு ஓடித் தப்பிவிட்டார். அதனால் வழக்கைத் தொடர்ந்து நடத்துவது கடினமாக உள்ளது எனத் தெரிவிக்கப்பட்டது. மேலும் நடராஜா சிவராஜா என்ற பெயருடைய முன்னாள் ஜனநாயக மக்கள் கூட்டமைப்பின் செயளாளராக இருந்த இவர் கொழும்பு 13ல் வசித்து வந்தபோது, வெளி நாட்டமைச்சர் லக்ஷ்மன் கதிர்காமர் கொலையில், புலியை ஆதரித்த காரணத்தால் கைது செய்யப்பட்டவர் எனவும் புலனாய்வுத் துறை தெரிவித்தது. ஆனால் நீதிமன்றமோ, இதுவரை செய்த ஆய்வுகளின் அடிப்படையில் வழக்கைத் தொடரும்படி கேட்டுள்ளது.

அரசின் வெளிநாட்டமைச்சரைக் கொலை செய்த வழக்கின் முக்கிய சந்தேக நபரை காவற்த் துறை இத்தனை சுலபமாக வெளியே விட்டுள்ளதும் அவர் காவற்துறைக்குத் தெரிவிக்காமல் நாட்டை விட்டுப் போனார் என்பதும் ஒரு தமிழனுக்கு அதுவும் புலி ஆதரவாளர் என்பதால் கைதானவருக்கு எப்படிச் சாத்தியமானது?

தெருவில் குண்டு வெடித்தாலே வீட்டில் உள்ள தமிழரை வருடக் கணக்கில் வழக்கும்

விசாரணையும் இன்றியும் ஆயிரம் ஆயிரம் அப்பாவித் தமிழர் சிறைச் சித்திரவதைக்கு உள்ளாகும் போதும் இந்த முக்கிய சந்தேகநபர் எப்படி, எவர் துணையோடு வெளியேறினார்? இதைக் கண்டறிந்து நீதிமன்றத்துக்குத் தெரிவிக்க புலனாய்வுத் துறைக்கு ஏன் 10 வருடங்கள் பிடித்துள்ளது? இதிலே இன்னொரு மர்மமும் தொக்கி நிற்கிறது. குறித்த நபரைச் சந்தேகத்தின் பேரில் கைது செய்ததாகத் தெரிவிக்காது புலிகளை ஆதரித்துப் பேசினார் என எதற்காகக் குறிப்பிடவேண்டும்?

அவர் புலிகள் இயக்கத்தைச் சேர்ந்தவரல்ல என்பதும் ஜனநாயக மக்கள் கூட்டமைப்பின் செயலாளராக இருந்தவர் என்றும் காவல் துறையே கூறும் போது இவரே உண்மையான கொலையாளி எனக் கருத இடமுண்டு அல்லவா? அப்படியானால் எப்படி இந்தக் கொலை புலிகளினால் செய்யப்பட்டது எனப் பரப்புரையும் புலிகள் இயக்கத்தின் மீதான தடையும் மேற்கொள்ளப்பட்டது? அந்த இரகசியம் இதோ அம்பலமாகிறது!

இந்த வழக்கை விசாரிக்கும் நீதிபதியின் மதியூகத்தை மெச்சாது இருக்க முடியாது. ஏனென்றால் இப்படியான நீதி பரிபாலனம் உலகில் இலங்கையில் மட்டுமே காண முடியும். இலங்கை அரசும் புலனாய்வுத் துறையும் கே.பி. எனப்படும் குமரன் பத்மநாதனை வெளிநாடு ஒன்றில் வைத்தே கைது செய்து கொழும்பில் சிறையில் வைத்திருக்கின்றன. வெளிநாட்டில் உள்ள புலிகளின் ஆதரவாளரைக் கைது செய்வோம் என அச்சுறுத்தியும் வருகிறது. அத்தனையும் செய்து முடிக்கும் ஆளுமை சிங்கள அரசுக்கு உள்ளதையும் மறுப்பதற்கு இல்லை. இருந்தும் இந்த முக்கிய சந்தேக நபரைத் தப்ப விட்டதும் அல்லாமல் அவரைக் கைது செய்யும் எண்ணமும் இல்லாமல் உள்ளதைக் கொண்டே சோடித்து விடுங்கள் என்பது போல் உயர்(?) நீதிமன்றத்தின் நடவடிக்கை உள்ளது. ஏன்? எதற்காக?

முக்கிய கொலைக் குற்றவாளி ஜனநாயக மக்கள் முன்னணியின் செயலாளர்! கொலைக் குற்றம் எங்கோ இருக்கப் பழியும் பாவமும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மீதும் தமிழ் மக்கள் மீதிலுமா என்ற கேள்வி எழுவது தவிர்க்க முடியாதது. இந்தக் கேள்விக்கு என்ன பதில்...? புதிர் முடிச்சை அவிழ்க்கிறது பின்வரும் செய்தி.

மேர்வின் மகேசன் என்பவர், கதிர்காமரின் கொலை இலங்கை அரசின் சதியா என முதலில் தமிழ் வாசகர்களுக்கு வீரகேசரி வார மஞ்சரி கட்டுரை மூலம் வெளிப்படுத்தினார். " வெளிவராத The Judgement இம் கதிர் காமரின் படுகொலையும்" என்பது அக்கட்டுரை. அதில் அவர் முன்னாள் வட மாகாண ஆளுனரும் புகழ் பெற்ற சிங்களத் திரைப்பட நடிகரும் தயாரிப்பாளருமான காமினி பொன்சேகா, அரச அதிபர் சந்திரிகா பண்டாரநாயக்காவின் அனுமதி பெற ஒரு திரைப்படக் கதையை முன்வைத்தார். ஆனால் அதற்கான அனுமதி மறுக்கப்பட்டது. ஆனால் அதே திரைப்படக் கதை இலங்கை அரசியலில் அரங்கேறுகிறதா எனப் பல வருடங்களுக்கு முன்னரே மேர்வின் மகேசன் தமது கட்டுரையில் கேட்டிருந்தார். அக்கட்டுரையின் சில பகுதிகள் வரிக்கு வரி அப்படியே தருகிறோம்.

"பொது ஜன முன்னணியின் முதல் ஆட்சியின் போது ஜனாதிபதி சந்திரிகா குமாரதுங்க அமெரிக்கச் செய்தி இதழ் ஒன்றுக்கு செவ்வி ஒன்றை வழங்கி இருந்தார். வடக்கு கிழக்கை 10 வருடங்களுக்கு விடுதலைப் புலிகளிடம் ஒப்படைக்கத் தயாராக இருப்பதாகவும் அதற்குச் சில நிபந்தனைகளை அவர்களுக்கு முன்வைக்கப் போவதாகவும் கூறி இருந்தார்.
இந்தச் செவ்வியை மேற்கோள் காட்டி மறைந்த வடக்கு கிழக்கு மாகாண முன்னாள் ஆளுனரும், பிரபல சினிமாக் கலைஞருமான காமினி பொன்சேகா The Judgement என்ற ஆங்கில நாவலை, இலங்கை இன விவகாரத்துடன் ஒப்பிட்டு சினிமாவாகத் தயாரிப்பதற்கான ஆயத்தங்களை மேற்கொண்டிருந்தார்.

விடுதலைப் புலிகள் வடக்கு கிழக்கை 10 வருடங்கள் நிர்வகித்து பல முன்னேற்றங்களைக் கண்டிருந்த வேளை, குறித்த தவணை அதாவது 10 வருடங்கள் முடிவடைகின்ற போது தென்னிலங்கையில் வெளியுறவு அமைச்சர் இனம் தெரியாதோரால் சுட்டுக் கொல்லப் படுகின்றார். அந்தக் குற்றம் விடுதலைப் புலிகள் மீது சுமத்தப்பட்டு சர்வதேச நாடுகளின் ஆதரவை இலங்கை அரசு பெற்றுக் கொள்கிறது.

அத்துடன் விடுதலைப் புலிகள் வசமிருந்த வடக்கு கிழக்கு நிர்வாகத்தை மீண்டும் இலங்கை அரசு கைப்பற்றுகின்றது. ஆனால் அமைச்சரின் கொலைக்கும் விடுதலைப் புலிகளுக்கும் சம்பந்தம் இல்லை என்பதையும், விடுதலைப் புலிகளை குற்றம் சுமத்தி, கொலைக்குப் பின்னணியில் இருந்தவர்கள், கதையின் இறுதியில் தண்டிக்கப்படுவதையும் இந்த சினிமாவின் கதை மிகவும் காத்திரமாக எடுத்துக்

காட்டியிருந்தது. இந்த சினிமாப் படப் பிடிப்பு ஆரம்பிக்க சில வாரங்களுக்கு முன்னர் துரதிஷ்டவசமாக படப்பிடிப்புக்கான தடையை ஜனாதிபதி வழங்கியிருந்தார்.

இந்தத் தடை உத்தரவை ஆட்சேபித்து, காமினி பொன்சேகா ஜனாதிபதியுடன் பல முறை விவாதித்தார். பின்னர் ஆளுனர் பதவியையும் இராஜினாமா செய்திருந்தமை குறிப்பிடத் தக்கது.

மேற்கூறப்பட்ட சினிமாக் கதைக்கும் தற்சமயம் நடந்தேறிய அமைச்சரின் கொலைக்கும் பெரு வித்தியாசம் கிடையாது. இது ஒரு எடுத்துக்காட்டாக இருந்தாலும், சற்று சிந்திக்க வேண்டிய விடயமாகக் கருதப்படுகின்றது.

இந்தக் கொலைச் சம்பவத்தை ஒவ்வொரு ஊடகமும் ஊகங்கள் அடிப்படையிலே செய்தியாய் வெளியிட்டு வருகிறது ஆனால் கொலைக்குப் பின்னணியில் இருந்தவர்களுக்கு மாத்திரமே கொலை-யாளிகள் யார் என்பது தெரியும். ஏனையவர்கள் எப்போதும் போன்று ஒருவரை ஒருவர் எப்போதும் சாடிக்கொண்டிருப்பார்கள்.

போர் நிறுத்த உடன்பாட்டின் பின்னர், இரு தரப்பு பிரமுகர்கள் தொடர்ச்சியாகக் கொல்லப்பட்டு வருகிறார்கள். இது ஒரு நல்ல அரசியலுக்கு ஏற்ற சமிக்ஞையாகத் தென்படவில்லை. இவற்றைச் சுருங்கச் சொல்வதென்றால், அரசியல் சாக்கடைக்குள் பிணங்கள்தான் அதிகமாகக் காணப்படுகின்றன.

தொடர்ந்தும் இப்பேர்ப்பட்ட சம்பவங்கள் இடம்பெறுமானால், படு பயங்கரமான விளைவுகளை சகல தரப்பினரும் எதிர்கொள்ள நேரிடும் என்பது மறைக்க முடியாத உண்மை. " -வீரகேசரிக்கும் மேர்வின் மகேசனுக்கும் நன்றி.

அன்று கட்டுரையாளர் எழுப்பிய கேள்விகளின் முழுப் பரிமாணமும் இன்று இந்த உயர் நீதிமன்றத்தில் இடம்பெற்ற காட்சிகள் சில உண்மைகளை எமக்குப் பட்டவர்த்தனமாக காட்டுகின்றன. உயர் நீதி மன்றத்தில், புலனாய்வுத் துறையும் நீதிமன்றமும் சொல்லாமல் சொல்லும் சேதிகளும் ஒன்றுதான். பொய் புரட்டால் தமிழரை மட்டும் அல்ல முழு உலகத்தையும் சிங்களத்தால் அடி முட்டாள்களாக்க முடியும் என்பதே அந்த உண்மை.
மொத்தத்தில் சிங்கள ஆட்சியாளரால் அவர்களின் ஏவல் நாய் போல் ஓடித் திரிந்து புலி வேட்டை ஆடிய லக்ஷ்மன் கதிர்காமரின் கொலைக்கும் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் தொடர்பே இல்லை என்பதே அந்த உண்மை. யார் அந்த சந்தேக நபரான நடராஜா சிவராஜா? ஜனநாயக மக்கள் முன்னணிக்கும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்துக்கும் என்ன தொடர்பு?

இப்போது நீதி மன்றத்தில் அரங்கேறும் காட்சிகள் கதிர்காமரின் கொலை ஒரு 'சேம் சைட் கோல்' போட்ட கதையாகவே தெரிகிறது. செத்தும் கொடுத்த வள்ளல் சீதக்காதி என்பது போல் செத்தும் தமிழினத்தைக் கெடுத்த கோடரிக் காம்பு கதிர்காமர் என்பது தெரிகிறது.
எமது அரசியல் விமர்சகர்கள் கட்டுரையாளர்கள் எவ்வளவோ முன்னேற வேண்டி உள்ளது. நிறை-ய விபரங்களைத் தெரிந்து தெளிவான பரந்த அறிவுடன் ஆய்வு செய்வதற்கும் பணத்துக்காக சி-னிமா விமர்சனம் போல் எழுதுவதற்கும் நிறையவே வேறுபாடு உண்டு என்பதையாவது தெரிந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் ஆரோக்கியமான சமூகப் பொறுப்பு வாய்ந்த வழிகாட்டலை ஆய்வாளர்களும் அவர்களது ஆய்வுகளும் மக்களுக்குத் தர முடியும். எம் இனத்துக்கு இன்று நல்ல சினிமா காண்பிக்கப் பட்டுவிட்டது. ஆனால் முடிவு மட்டும் மாறி விட்டது. முழு உலகத்தையும் சிங்களம் முட்டாளாக்கி வெற்றிக் களிப்பில் மிதக்கிறது. இன்னுமா தமிழா புரியவில்லை?




வர்த்தக உலகில் உயர ஏணி விளம்பர சேவையில் புதிய பாணி
வர்த்தகர்குரல்
VAGUL.COM

# தமிழர் விளையாட்டு விழா ஜேர்மனி, 2011




16.07.2011 சனிக்கிழமை அன்று யேர்மனியிலுள்ள டோட்முண்ட் நகரில் தமிழர் விளையாட்டு விழா மிகவும் எழுச்சியாக நடைபெற்றது.









தமிழீழத் தேசியக் கொடி ஏற்றி வைக்கப்பட்ட பின், ஆசிரியை சாவித்திரி இம்மானுவேல் அவர்களின் மாணவிகள் நிகழ்த்திய கிராமிய நடனம் இடம்பெற்றது. பின்னர் விளையாட்டுக்கள் ஆரம்பமானது. இன் நிகழ்வினில் உதைபந்தாட்டம், மெய்வல்லுணர்ப் போட்டிகள், மட்டைப் பந்தாட்டம், மற்றும் தமிழர்களின் பாரம்பரிய விளையாட்டுக்களாகிய தாச்சி மறித்தல், முட்டி உடைத்தல்,ஆகிய விளையாட்டுக்களும் சிறுவர்களுக்கான குழு விளையாட்டுக்களும் நடைபெற்றன. வெளிநாடுகளில் இருந்தும் இம்முறை பல விளையாட்டுக்குழுக்கள் கலந்துகொண்டிருந்தன.

குழப்பமான காலநிலைக்கு மத்தியிலும் ஏராளமான மக்கள் கலந்துகொண்டிருந்தமையைக் காணக்கூடியதாகவிருந்தது. தாயக மணம்கமழும் உணவுப்பொருட்களான அப்பம், கூழ் முதற்கொண்டு, அனைத்துவிதமான உணவுப்பொருட்களும் தயார்செய்யப்பட்டு விற்பனைசெய்யப்பட்டது. மாலை நேரத்தை இசையோடு அலங்கரித்த இளஞ்சூரியன் இசைக்குழுவினர், வயதில் சிறியவர்களாக இருந்தபோதும், அதீத திறமையோடு, நிகழ்வை நடாத்தியமை மிகவும் பாராட்டுக்குரியது.

அத்துடன் Dortmund தமிழர் நுண்கலைக் கல்லூரியைச் சேர்ந்த உறவுகள், சிறுவர்களை மகிழ்விக்கும் விளையாட்டுக்களில் ஈடுபட்டமையைக் காணக்கூடியதாகவிருந்தது. இவர்களுடன் யேர்மனிய நாட்டவர்களும் இணைந்து செயற்பட்டமை குறிப்பிடத்தக்கது. இந்நிகழ்வு தனியே ஒரு விளையாட்டுப்போட்டியாக அமையாது, உறவுகளிற்கிடையேயான உறவுப்பாலமாகவும் அமைந்தது.இறுதியாக மாலை 20.00 மணியளவில் வெற்றிபெற்றவர்களுக்கு வெற்றிப் பதக்கங்களும் வெற்றிக் கிண்ணங்களும் வழங்கி ஊக்குவிக்கப்பட்டது. பின் தேசியக் கொடி இறக்கிவைக்கப்பட்டு நிகழ்வு இனிதே நிறைவுபெற்றது.



# மாரடைப்புக்கு அருமருந்து இஞ்சி!

மாரடைப்பைத் தடுக்கும் சக்தி இஞ்சிக்கு உள்ளதாகக் கண்டறியப்பட்டுள்ளது.

"இதயத்துக்கு இரத்தத்தைக் கொண்டு செல்லும் குழாயில் அடைப்பு ஏற்படுவதைத் தடுக்கும் ஆற்றல் இஞ்சிக்கு உள்ளது. கொழுப்புச்சத்து உள்ள உணவை சாப்பிடும் பொழுது ஐந்து கிராம் அளவுக்கு இஞ்சியைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். கொழுப்புச் சத்து நிறைந்துள்ள உணவை அடிக்கடி சாப்பிடுவது இரத்த நாள இயக்கத்தை நாளடைவில் வலுவிழக்கச் செய்துவிடும்.

இரத்தநாளங்களில் இரத்தக்கட்டு ஏதேனும் ஏற்படுமாயின் அதை சரிசெய்வது அவ்வளவு எளிதன்று. இதற்குக் கைகண்ட மருந்தாக இஞ்சி விளங்குகின்றது. இரத்த நாளங்களின் செயற்பாட்டை மேம்படுத்தி மாரடைப்பு நேராமல் இஞ்சி தடுக்கின்றது." என்று இந்திய மருத்துவக் கழக இதழில் டாக்டர் SK வர்மா தெரிவித்துள்ளார்.

இஞ்சியின் மருத்துவகுணத்தைக் குறித்து அறிய ஆரோக்கியமான 30 நபர்களிடம் சோதனை நடத்தப்பட்டது. முதல் வாரத்தில் 50 கிராம் வெண்ணையும், 4 ரொட்டித்துண்டுகளும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. அடுத்த வாரம் அதனுடன் ஐந்து கிராம் இஞ்சி சேர்த்துக் கொடுக்கப்பட்டது. அதற்கு அடுத்த வாரம் அவர்களின் இரத்தம் சோதிக்கப்பட்டது. அவர்களின் இரத்த நாளத்தின் முதல் வார இயக்கம் 18.8 சதவிகிதம் குறைந்து இருந்தது. ஆனால் அதற்கு அடுத்த வாரம் 6.7 சதவிகிதம் அதிகரித்து இருந்தது.

இதன் மூலம் இரத்தநாளங்களின் செயற்பாட்டிற்கும், இரத்த ஓட்டத்திற்கும் இஞ்சியின் பயன்பாடு தெளிவாக நிருபிக்கப்பட்டது. மாரடைப்பு ஏற்படுவதற்கு, இரத்தநாளங்களில் ஏற்படும் அடைப்பும், அவற்றில் ஏற்படும் இரத்தக் கட்டும் மிக முக்கிய காரணங்கள் ஆகும்.

கொழுப்புச் சத்து அதிகமாக உள்ள உணவுகளை அதிகம் பயன்படுத்துபவர்களுக்கு மாரடைப்பு ஏற்படுவதற்கான சாத்தியம் அதிகம்.. இதற்கு இரத்தநாளங்களின் சுவர்களில் கொழுப்புப் படிந்து இரத்த நாளங்களை வலுவிழக்கச் செய்வதும், இரத்த ஓட்டத்தின் வேகத்தை அது பாதிப்பதும் காரணமாகும். மேற்கண்ட ஆய்வின் மூலம் இரத்தநாளங்களின் வலுவிற்கும், சரியான இரத்த ஓட்டத்திற்கும் இஞ்சி வெகுவாக உதவுகிறது என்பது நிரூபணமாகியுள்ளது.

இந்த இஞ்சியின் பலன்கள் இதோடு நின்றுவிடவில்லை. மேலும் பல நோய்களுக்கு அருமருந்தாக இது உள்ளது.

➪ சளிப்பிடித்தல்: ஜலதோச நோய்க்காரணியான வைரஸைத் தாக்கி அழிக்கிறது, தலைவலியைப் போக்குகிறது.

➪ இரத்தஓட்டம் சீராக இருக்க உதவுகிறது, கொழுப்புச்சத்தைக் குறைக்கிறது, மைய நரம்பு மண்டலத்தைத் தூண்டி இருதய, சுவாசத் தசைகள் சீராக இயங்க உதவுகிறது.

➪ மலச்சிக்கல் ஏற்படுவதைத் தடுக்கிறது.

➪ செரித்தலைச் சீராக்கி வயிற்றுவலி ஏற்படுவதைத் தடுக்கிறது.

➪ கருப்பைவலிக்கும் மாதவிலக்கு நேரங்களில் அடிவயிற்றில் உண்டாகும் வலிகளுக்கும் நன்மருந்தாக உள்ளது.

➪ தோலில் உண்டாகும் உலர்சருமம், காயங்கள், சிரங்குகள் போன்றவற்றிக்கும் இது நல்ல மருந்தாகும்.

➪ மூட்டுவலிக்கும் இது நன்மருந்தாக இருப்பதால் ஆஸ்பிரின் ஒவ்வாதவர்களுக்கு இது நல்லதொரு அருட்கொடையாகும்.

எனவே ஒவ்வொரு நாள் உணவிலும் இஞ்சியை சேர்த்துக்கொள்வது உடலுக்குப் பாதுகாப்பானது என மருத்துவ ஆராச்சியாளர்கள் கூறுகின்றனர்.

அ(த்தகைய)வருக்கு, அவர் எண்ணியிராத புறத்திலிருந்து, அவன் உணவு (வசதி)களை அளிக்கிறான். மேலும், எவர், அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டு அவனை முற்றிலும் சார்ந்திருக்கிறாரோ, அவருக்கு அவன் போதுமானவன். நிச்சயமாக அல்லாஹ் தன் காரியத்தை நிறைவாக்குபவன் - திண்ணமாக அல்லாஹ் ஒவ்வொரு பொருளுக்கும் ஓர் அளவை உண்டாக்கி வைத்திருக்கின்றான். (திருமறை 65:3)

## இனிமேலும் சும்மா நாயே என்று திட்டாதீர்கள்!



போதை மருந்து கடத்தல், வெடி குண்டு கண்டறிதல், பார்வை அற்றவரைப் பாதையில் பாதுகாப்பாக அழைத்துச் செல்வது, நம்பிக்கையான கணவன் நல்ல மனைவி சிலருக்குக் காதலியும் போல் பலருடைய படுக்கைப் பங்காளியாகவும் நாய்கள் உள்ளன. எம்மவரைப் பொறுத்த வரை எல்லாமே நாய்தான்.

ஆனால் இராணுவத்தில், தவறிய படையினரைக் கண்டு பிடிக்க, எதிரிப் படை எல்லைக்குள் பதுங்கிப் பதுங்கி நுழைந்து வேவு பார்க்க என்று நாய்கள் பயிற்சி அளிக்கப் பட்டுள்ளன. பின் லேடனை காட்டிக் கொடுத்த நாய் இப்போது சேவையில் இருந்து ஓய்வு பெற்று பொழுதை உல்லாசமாகக் கழிக்கிறது.



மனிதரை விடவும் 40 விதமான மணத்தை அடையாளம் கண்டு அறியும் திறமை இந்த நாய்களுக்கு உண்டு. ஜேர்மன் செப்பேட் இனம் தலைசிறந்தது என்றாலும் அதற்கு ஈடான ஆனால் அளவில் சிறிய இனமான மலினோயிஸ் இனமும் இராணுவ சேவையில் திறமையுடன் செயற்பட வல்லன. இவற்றுக்கென, மனிதருக்கு உள்ளவை போன்றே தற்பாதுகாப்பு உடைகளும் வீடியோ படம் இரவு நேரத்திலும் எடுத்து சமகாலத்தில் ஒளிபரப்புச் செய்ய வல்ல கருவிகளும் பொருத்தப் பட்டிருக்கும். தாக்குதல் சாகசங்களில் இவை மனிதருக்கு ஈடாகத் துணிச்சலுடனும் எச்சரிக்கையுடனும் செயற்பட வல்லவை.

30,100 அடிகள் உயரத்திலிருந்து பரசூட் மூலம் கீழே குதிக்கும் காட்சி இது.

இன்று சர்வதேச அரங்கிலும் த.தே.கூட்டமைப்பிலும் தமிழருக்கு 13 வது திருத்தச் சட்டத்தின் கீழ் காணி, காவற்துறை அதிகாரத்துடன் அரசியல் தீர்வு வேண்டும் என்று பேசப்பட்டு வருகிறது. இது எத்தனை மோசமான உப்புச் சப்பு இல்லாத சட்டம் என்பதை விடயம் நன்கு தெரிந்த ஒருவரின் விரிவான கட்டுரை புட்டுப் புட்டு வைக்கிறது. இதுபற்றி மேல்மாகாண சபையின் முன்னாள் செயலர்களில் ஒருவரும், இன்று ஒரு தீவிர சமூக சிந்தனையாளரும் மனித உரிமை பற்றி எமது நிலையை சர்வதேச அரங்குகளில் தமது வயது, கால, நேர சங்கடங்களைப் பாராது உழைத்துவரும் திரு. எம்.சி.எம் இக்பால் ஆங்கிலத்தில் எழுதிப் பிரசுரமான கட்டுரையின் முக்கிய பகுதிகளின் தமிழாக்கத்தை அவரது அனுமதியோடு தமிழில் தருவதில் அகரம் பெருமை அடைகிறது. அவரது சமூக நலத் தொண்டுக்கும் இதனைப் பிரசுரிக்க அனுமதி அளித்தமைக்கும் எமது நிறைவான நன்றி. அவரது ஆங்கில மூலக் கட்டுரையை http://groundviews.org/2009/07/19/devolution-of-powers-under-the-13th-amendment-in-sri-lanka-fact-or-fiction/ -இணையத் தளத்தில் பார்க்க முடியும். - (ஆ-ர்) கட்டுரையின் அறிமுகத்தில் அவர் இப்படிக் குறிப்பிட்டுள்ளார்.

இலங்கையில் தமிழீழ விடுதலைப் புலிகள் தோற்கடிக்கப்பட்டதன் பின்னர் போருக்குக் காரணமாக அமைந்த தமிழ் மக்களின் அரசியல் சிக்கலுக்கு ஒரு தீர்வு தரப்படும் என்ற தனது வாக்குறுதியை அரசு நிறைவேற்றும் எனப் பலரும் எதிர்பார்த்தனர். அண்மையில் (2009ல்) சனாதிபதி இந்து செய்தி நாள் இதழுக்கு வழங்கிய நேர்காணலில், அவ்வாறான தீர்வு அடுத்த சனாதிபதித் தேர்தலின் பின்னர்தான் முன்வைக்கப்படும் என்ற கூற்று எதிர்பார்த்து இருந்தவர்களை ஏமாற்றிவிட்டது.



வேறு பலரைப் போன்றே இந்தியாவும் 13வது அரசமைப்புத் திருத்தச் சட்டத்தின் மேலதிக சரத்துகளின் முழுமையான அமுலாக்கத்தின் மூலமே பரவலாக்கம் மேலும் வலுவாகவும், தமிழ் மக்களின் அபிலாசைகளை சாத்தியமான வகையில் நிறைவு செய்யும் எனவும் கருதுகிறது. பாராளுமன்றத்தில் பெரும்பான்மையான பிரதிநிதிகளைக் கொண்டுள்ள தமிழர் தேசியக் கூட்டமைப்பு (த.தே.கூ.) இந்த ஆலோசனைகள் தமது எதிர்பார்ப்புகளுக்கு எந்த வகையிலும் ஏற்புடையன அல்ல என நிராகரித்து விட்ட நிலையில், மறு முனையில் ஜாதிக ஹெல உறுமயவும் ஜனதா விமுக்திப் பெரமுனையும் 13வது திருத்தச் சட்ட அமுலாக்கம் நாட்டைப் பிளவுபடுத்திவிடும் என மிக மூர்க்கத் தனமாக எதிர்க்கின்றன.

உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் இதுபற்றி நிறையவே பல்வேறு இதழ்களில் எழுதப்பட்டும் ஆய்வரங்குகளிலும் தொழிற் பட்டறைகளிலும் விவாதிக்கப்பட்டும் விட்டது. இவற்றுக்கு மத்தியிலும் நிறையப் பேர் 13வது திருத்தச் சட்டத்தின் பல்வேறு சரத்துகளின் உண்மையான பாதிப்புகளை இன்னமும் விளங்கிக் கொள்ளாமலே உள்ளனர்.

இந்தச் சட்டத்தையும், மாகாண சபைச் சட்டத்தையும் வரைந்தவர்கள் மிகச் சாதுரியமாகப் பரவலாக்கம் உண்மையாகவே உள்ளது போன்ற ஒரு மாயத் தோற்றப்பாட்டை புகுத்தி விட்டுள்ளார்கள். இந்த நிலையை மிகச் சரியாக இலங்கையின் ஐக்கிய நாடுகளின் பிரதிநிதி தயான் ஜயதிலகா பின்வருமாறு விபரித்துள்ளார்:

# 13வது திருத்தச் சட்டம்!

## காணிகள் காவல்துறை கிடைத்தாலும் தமிழினம் தானாகத் தேடும் புதை குழி!

13வது திருத்தச் சட்டத்தில் குறிப்பாக ஏதோ ஒன்று இருப்பதாக நினைத்துச் சிங்களவர்கள் எதிர்க்கிறார்கள். அதனால்தான் தமிழர் அதனை ஆதரிக்க வேண்டும். தமிழ் தீவிரவாதிகள் (பிரபாகரன்) "முன்னரும் இப்போதும் எதிர்க்கிறார்கள்

ஏன் என்றால் அதில் பிரிவினைக்கான எதுவுமோ அல்லது அதற்கான வேக வீதியாகவோ இல்லை என்பதால். உண்மையில் அது பிரிவினை இலக்கைப் புதை குழியில் தள்ளுகிறது. அந்த ஒரு காரணத்துக்காக சிங்களவாதிகள், மிதவாதிகள், புரட்சிவாதிகள், அறிவார்ந்த சிங்களத் தேசியவாதிகளும் கூட கண்டிப்பாக ஆதரிக்க வேண்டும்."

இருதரப்புமே இதுபற்றிய தப்பான அபிப்பிராயங்களைக் கொண்டிருக்கும் போது தயான் சிங்களவாதிகள், மிதவாதிகள், புரட்சிவாதிகள்,அறிவார்ந்த சிங்களத் தேசியவாதிகளும் கூட ஆதரிக்க வேண்டும் எனத் தூண்டுவது அதிகாரப் பரவலாக்கம் இருப்பதால் அல்ல மாறாக மாகாண சபை மீது உள்ள ஜனாதிபதியின் அதிகாரம் அதன் அனைத்து அதிகாரங்களையும் எடுத்து விடுகிறது என்பதை எமக்கு விளக்கமாகக் காட்டவில்லையா?

13வது திருத்தச் சட்டம் உள்ள படியில் ஏன் போதுமானதாக இல்லை? என்ற கட்டுரையில் கலாநிதி எஸ். நரபாலசிங்கம் இப்படிக் கூறுகிறார்:

"13வது திருத்தச் சட்டம் உண்மையில் கெட்ட எண்ணத்தோடு வரையப் பட்டதும், எல்லா இலங்கை மக்களையும் சம பங்காளிகள் ஆக்கத் தேவையான எதற்கும் இடம் தராத, பயனற்றதும், அரை நூற்றாண்டுக் காலமாக சொல்லோடு விளையாடியும் செயலில் எதுவும் செய்யாமலும் நாட்டை இந்தத் துயர நிலைக்கே கொண்டு வந்த பின்னரும் கூடவா இப்படி என்பது கவலையாக உள்ளது. சிக்கலான பிரச்சினைகளை கவனத்தில் கொள்ளாத சிந்தனை ஓட்டமே இன்னமும் நீடிக்கிறது."

எனவே நாங்கள், குறித்த திருத்தச் சட்டமும் மாகாண சபைச் சட்டமும் கொண்டுள்ள சரத்துகளை காட்டமான பார்வைக்கு உட்படுத்தி அதிகாரப் பரவலாக்கம் என்று சொல்லப்படுவது உண்மையா? உருவகமா? எனப் பார்ப்போம்.

ஜனாதிபதியின் தனித்த விருப்பத்துக்கு அமைவாக நியமிக்கப்பட்ட ஆளுனர் ஒவ்வொரு மாகாண சபையின் நிர்வாகத் தலைவராக இருப்பார். ஆனால் அவர் அந்த அதிகாரங்களை அவரால் நியமிக்கப்பட்ட மாகாண முதலமைச்சர் மற்றும் நான்கு மாகாண அமைச்சர்கள் மூலம் செயற்படுத்துவார். ஆளுனர் சனாதிபதியின் விருப்பத்துக்கு அமையவே அவரது பதவி உள்ளது என்ற காரணத்தால் அவர் எப்போதும் சனாதிபதியின் திருப்திக்கு இசைவாகவே செயற்பட முடியும். தவறினால் அவரது பதவி பறிக்கப்படும். (ஆளுனராகத் துடிப்போரே இதனை முதலில் தெரிந்து கொள்ளுங்கள்).

13வது திருத்தச் சட்டமானது மாகாண பொதுச் சேவை ஒன்றை உருவாக்கும், அதன் உறுப்பினரின் நியமனம், இடமாற்றம், பணி நீக்கம் மற்றும் ஒழுக்க நெறிக் கட்டுப்பாடு என்பன ஆளுனரின் பொறுப்பில் இருக்கும் எனவும் கூறுகிறது. ஆகவே, மாகாணசபைக்கு அதன் தீர்மானங்களைச் செயற்படுத்துகிற அதன் பொதுச் சேவை அதிகாரிகளின் மீது கூட எதுவித கட்டுப்பாடும் கிடையாது. அவர்கள் ஆளுனர் வழிகாட்டலுக்குக் கட்டுப் பட்டவர்களாயும் அவருக்கே விசுவாசம் உள்ளவர்களாகவும் இருக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

அடுத்து ஆளுனர் தனது நிறைவேற்று அதிகாரங்களைச் செயற்படுத்தும் மாகாண அமைச்சர்களின் அதிகாரங்கள் எவை எனப் பார்ப்போம். முதல் அமைச்சரும் அமைச்சர் குழுவும் மாகாண ஆளுனர் தமது கடமைகளைச் செய்ய உதவியும் ஆலோசனையும் வழங்க 13வது திருத்தச் சட்டம் வகை செய்கிறது. எனவே மாகாண அமைச்சர்களுக்குச் சுயமாக மாகாண நிர்வாகம் செய்யும் அதிகாரம் கிடையாது என்பது தெளிவாகிறது.

அமைச்சர் குழு எடுக்கும் முடிவுகள் அனைத்தும் முதலமைச்சர் ஆளுனருக்குத் தெரிவிக்க வேண்டும் எனவும் சட்டம் கூறுகிறது. எனவே பதவி நீக்கம் உட்பட பாரிய பின் விளைவுகளுக்கு உட்படாது இருக்க வேண்டும் எனில் மாகாண அமைச்சர்கள் ஆளுனருக்குத் தெரியாமல் எதுவும் செய்ய முடியாது. ஆளுனரால் வழங்கப்பட்ட கடமைகளாக இருப்பினும் அமைச்சு பற்றிய எந்த ஒரு தகவலும் ஆளுனருக்குத் தேவை எனில் மாகாண அமைச்சர்கள் கொடுக்க கட்டாயப் படுத்துகிறது இந்தச் சட்டம்.

மாகாண சபையின் சட்டவாக்க அதிகாரங்கள். சட்டவாக்க அதிகாரங்களைப் பொறுத்த மட்டில் 13வது திருத்தச் சட்டத்தின் 9வது பட்டியல் விடயங்கள் கடமைகள் என்ற வகையில் 3 பட்டியல்களைக் கொண்டுள்ளது. ஒதுக்கப் பட்ட பட்டியல் (Reserved List –RL.) மாகாண சபைப் பட்டியல் (Provincial Council List-PCL) சமாந்தரப் பட்டியல் (Concurrent List-CL) என்பன. ஒதுக்கப்பட்ட பட்டியல் மத்திய அரசுக்கு உரியதான அதிகாரங்களை மட்டுமே கொண்டது. அது போன்றே மாகாண சபைச் சட்டம் இயற்ற அதிகாரம் அளிக்கப்பட்ட விடயங்களைக் கொண்டது மாகாண சபைப் பட்டியல்.

மாகாண சபைப் பட்டியலில் உள்ள விடயத்திலும் கூட மாகாண சபையின் சட்டவாக்க அதிகாரம் முற்றிலும் மாகாண சபைக்கே உரித்தானது அன்று. தேசிய அளவிலான கொள்கையாக பாராளுமன்றம் வகுக்கும் எல்லா விடயங்களும் அதிகாரங்களும் ஒதுக்கப்பட்ட பட்டியல் ஏற்பாடு செய்கிறது என்பதைக் கவனிக்க முடியும். இந்த சரத்தை எல்லா ஆட்சியாளரும் தொடர்ச்சியாக மீறி வருகின்றனர். சாதாரண பெரும்பான்மை கொண்டே தேசியக் கொள்கையை வகுக்க பாராளுமன்றத்துக்கு அதிகாரம் அளிக்கிறது.

ஆனால் மத்திய அரசு சாதாரண பெரும்பான்மை கொண்டு நிறைவேற்றிய எந்த ஒரு தேசியக் கொள்கையையும் மீறும் வகையில் மாகாண சபைச் சட்டம் இயற்ற முடியாது. உதாரணமாக ஒரு நிகழ்வைக் கூறமுடியும். இப்போது அந்தந்த முகாமைத்துவ மற்றும் மனித உரிமைகள் அமைச்சராக இருக்கும் திரு. மகிந்த சமரசிங்க மேல்மாகாண சபையின் முதலாவது போக்கு வரத்து அமைச்சராக இருந்த காலத்தில், மேல் மகாணத்துக்குப் போக்கு வரத்துச் சேவையைத் தொடங்க சட்டம் இயற்றி சீனாவிடமிருந்து 3 பேருந்துகளையும் விலைக்கு வாங்கிப் போக்கு வரத்துச் சேவையைத் தொடக்கியும் வைத்தார்.

சேவை தொடங்கப்பட்ட சில வாரங்களுக்கு உள்ளாகவே அப்படியான ஒரு போக்கு வரத்துச் சேவை மத்திய அரசின் போக்கு வரத்து பற்றிய தேசியக் கொள்கைக்கு முரணானது எனப் பிரகடனப்படுத்தி விடயம் பாராளுமன்றத்துக்கு எடுக்காமலே மாகாண அமைச்சரையும் அன்றைய ஜனாதிபதி பதவியில் இருந்து நீக்கினார். இதனை வேறு விதமாகச் சொல்வதானால், பதவிக்கு வரும் அரசுகள் எல்லாம் தேசிய கொள்கையை சட்டமாக இயற்றாமலே அமைச்சரவை ஆணைகள் அமைச்சர்களின் சுற்று நிருபங்கள் மூலம் வடிவமைத்து வருகின்றன.

1995ல் குணவர்த்தன ஆணைக்குழு என்ற ஒன்று மாகாண சபைகளின் செயற்பாடுகள் பற்றி தெரிந்து அறிக்கை தர நியமிக்கப்பட்டது. மாகாண சபைப் பட்டியலில் உள்ள விடயங்களைக்கூட மத்திய அரசின் அமைச்சர்கள் தேசியக் கொள்கை அமுலாக்கம் என்ற சாட்டில் தமது ஆதிக்கத்தை மாகாண அமைச்சர்களின் நிர்வாகத்தில் செலுத்தும் அளவுக்கு உள்ளதாகக் குழுவின் அறிக்கை கூறியது.

மாகாண சபையின் நிதி நிர்வாகம்

நிறைவேற்று மற்றும் சட்டவாக்க அதிகாரங்களுக்கும் அப்பால் மாகாண அரசுக்குத் திட்டங்களையும் நிர்வாகத்தையும் செய்வதற்கு நிதி தேவைப்படுகிறது. மாகாண அரசின் நிதித் தேவைகள் பற்றி மத்திய அரசுக்கு சிபாரிசு செய்யும் ஒரே கடமை மட்டுமே கொண்ட ஒரு நிதி ஆணையத்தை நியமிக்க 13வது திருத்தச் சட்டம் வகை செய்கிறது. ஆணைக்குழுவின் உறுப்பினர்கள் ஜனாதிபதியால் நியமிக்கப்படுவர். அதன் உறுப்பினராக மத்திய வங்கியின் ஆளுனர், திறைசேரிச் செயலர், மற்றும் இலங்கையின் பிரதான மூன்று சமூகத்திலிருந்தும் மூவர் என இருப்பர். இருந்தும் என்ன? இந்தக் குழுவின் ஆலோசனையை சனாதிபதி ஏற்க வேண்டும் என்ற கட்டாயம் கிடையாதே! ஒவ்வொரு மாகாணசபைக்கும் எவ்வளவு கொடுக்க வேண்டும் என்று தீர்மானிப்பதும் ஜனாதிபதியின் முடிவாகவே இருக்கும்.

மத்திய அரசின் அரச பொது நிதியிலிருந்து வழங்கப்படும் நிதியும், மாகாண சபைகளின் வரிகள் மற்றும் கடன் போன்றவற்றின் மூலம் பெறப்படும் நிதியும் ஒவ்வொரு மாகாண சபையின் பொது நிதியில் வைப்பு செய்யப்படும். ஆனால் ஆளுனர் ஒப்புதல் இன்றி மாகாண சபை எந்த ஒரு பணத்தையும் மீளப் பெற முடியாது. அத்துடன் ஆளுனர் விதந்துரை இல்லாது மாகாணசபை செலவினத்தை ஏற்படுத்தும் சட்டங்கள் இயற்றவும் முடியாது. ஆளுனர் ஒப்புதல் இல்லாது வரி விதிக்கும் அல்லது வரிவிலக்கு அளிக்கும் சட்டம் எதுவும் மாகாணசபையால் இயற்ற முடியாது.
மாகாண சபையின் செலவினங்கள் நிதிப் பயன்பாடுகளை கட்டுப்படுத்தும் விதிமுறைகளை ஆளுனர் வகுக்கக் கடமைப் பட்டுள்ளார். குறித்த நிதி ஆண்டுக் காலத்தில் மாகாணச் சட்டத்தின் மூலம் அனுமதிக்கப்பட்டால் அல்லாது முதல் அமைச்சர் கூட நிதி மீளப் பெற அனுமதி அளிக்க முடியாது. மாகாண சபையால் நிறைவேற்றப்படும் எந்த ஒரு சட்டமும் ஆளுனர் அங்கீகாரம் அளித்த பின்னரே அமுலாக்கம் பெறும்.

எனவே மாகாணசபைக்கு சபையின் நிதி சம்பந்தமான விடயங்களில் சுயமான அதிகாரம் கிடையாது என்பது அப்பட்டமான உண்மை. இந்த விடயத்திலும் கூட பரவலாக்கம் என்ற கருத்தியல் நிதி நிர்வாகம் செலவினம் என்பவற்றின் மீது விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகளால் இல்லாமல் செய்யப் பட்டுவிட்டது.

முடிவுரை

காலத்துக்குக் காலம் சனாதிபதி எந்த ஒரு

மாகாணசபைக்கும் நெறிப்படுத்தல் வழங்க முடியும். அத்தகைய நெறிமுறைகளை மாகாண-சபை கடைப்பிடிக்கத் தவறினால், மாகாண நிர்வாகம் அரசமைப்பு விதிகளுக்கு அமைவாக நடத்தப்படவில்லை எனவும் அதனைப் பாராளுமன்றம் கையகப் படுத்துவதாகவும் சனாதிபதி அரசமைப்பில் தமக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களைப் பயன் படுத்தி பிரகடனம் மூலம் அந்த மாகாண சபையின் செயற்பாடுகளைப் பொறுப்பேற்க முடியும்.

"மருத்துவமனைக் கூலித்தொழிலாளியைக் கூட நியமிக்க தாம் விரும்பியபடி செய்ய", மாகாண ஆளுனர் அனுமதி மறுக்கிறார் என்று கிழக்கு மாகாண சபையின் முதலமைச்சரும், மாகாணசபைப் பேச்சாளராகவும் உள்ள சுகாதார அமைச்சரும் பகிரங்கமாகக் குற்றம் சாட்டும் நிலை கிழக்கில் காணப்படுகிறது. ஆளுனர் என்பவர் ஜனாதிபதியின் மாகாணப் பிரதிநிதி என்பதே உண்மை.

13வது திருத்தச் சட்டத்தின் அதிகாரங்கள் அமுல் செய்யப்பட்டால் மாகாண சபைகள் தனிநாடு உருவாக்கத்துக்கு இடம் அளித்துவிடும் என்ற நம்பிக்கையைச் சிதறடிக்கும் முக்கிய சரத்துகளில் சிலவே. அவை தமிழ் மக்களின் அபிலாசைகளுக்கு மிக எட்டாத தூரத்தில் உள்ளன என்பதே உண்மை. இந்தத் திருத்தச் சட்டம் குறைவாகவோ நிறைவாகவோ அமுலாக்கப் பட்டாலும் போருக்கு வழி வகுத்த காரணங்கள் தொடர்ந்தும் இருக்கவே செய்யும்.

மாகாணக் காவல் துறை மற்றும் காணி பற்றிய அதிகாரப் பரவலாக்கம் என்ற இரு விடயங்களும் இது விடயமாக அடிக்கடி கவனத்தில் பர பரக்கப் பேசப்படும் விடயங்களாக உள்ளன. இவற்றுக்கான அதிகாரங்கள் முழுமையாக வழங்கப் பட்டாலுங்கூட ஏனைய விடயங்கள் பற்றி ஆளுனருக்கு உள்ள அதிகாரங்களால் அவை அனைத்துமே இல்லாது செய்யப்பட்டுவிடும். மேலும் மத்திய அரசு எந்நேரமும் அவற்றின் மீதான தனது தேசியக் கொள்கைகள் என்ற காரணம் காட்டி வலது கரத்தால் கொடுப்பது போல் கொடுத்து அதனைத் தனது இடது கரத்தால் பறித்து விட முடியும்.

சுருங்கச் சொல்வதென்றால், மாகாண சபையின் நிறைவேற்று மற்றும் சட்டவாக்க அதிகாரங்கள் தொடர்ந்தும் சனாதிபதியிடமே அதாவது அவரால் நியமிக்கப்படும் ஆளுனர் இடமே இருக்கும். முதல் அமைச்சரோ அல்லது அமைச்சர்கள் சபையோ ஆளுனா் அதிகாரங்களை எந்த வகையிலும் மீற முடியாது.

கட்டுரை ஆசிரியர் தந்துள்ள விளக்கங்களின் படி மத்திய அரசு அதாவது ஜனாதிபதி கொடுக்கும் நிதிப் பிச்சையால் தான் தமிழரின் இராச்சியம் நடக்க முடியும். தமிழ் மக்களின் குடுமியை சிங்களப் பேரினவாத சனாதிபதி ஆட்சியின் கைகளில் கொடுத்து விட்டு கையிலை காசும் இல்லை வாயில் தோசையும் இல்லை என்ற நிலையில் தமிழா உன் ஆசைக்கு என்ன வேலை?


Importas

Cash & Carry

Tel.: +41 52 672 2838

Fax : +41 52 672 2839




A to Z Groceries

Retail & Wholesale

Baslerstrasse 102
8048 Zürich
Switzerland.

# K.B. INTERCOM

Kiosque, Tabac, Internet, Télécommunication,
Alimentation Africain, Aisatique & Amerique du Sud

மிகக் குறைந்த விலையில் அனைத்து
நாடுகளுக்குமான தொலைபேசி அட்டைகள்!



மரக்கறி வகைகள், அதிகுளிரூட்டப்பட்ட
மீன் மற்றும் இறைச்சி வகைகளை
மிகக் குறைந்த விலையில் எம்மிடம்
பெற்றுக்கொள்ளலாம்.

தொடர்புகளுக்கு:

உரிமையாளர்: U. KARTHIGESU

Av des Alpes 40, 1820 Montreux, Switzerland

Tel.: 021 961 27 16 Fax: 021 961 27 19 Natel: 079 681 56 44



WESTERN UNION
MONEY TRANSFER

தற்பொழுது உலகெங்குமான துரித
பணமாற்றுச் சேவையும் உண்டு.




## பல்துறைக் கலைஞர் பிரியாலயம் துரைஸ் அவர்களுடன் ஒரு சந்திப்பு...

எல்லோருக்கும் இவர் "துரைஸ்"தான்.

துரைராஜா என்ற இந்த துரைஸ் தான் பிரான் -ஸில் (ஐரோப்பாவில் என்றுகூடச் சொல்லலாம்) மேடையில் தோன்றிய முதல் நாடகக் கலைஞன்!

இப்படிப் பல முதல் என்னும் அடையாளத்தை இவர் தனதாக்கி வைத்திருக்கின்றார்! ஆமாம் ஐரோப்பாவில் முதல் ஒலித்த தமிழ் வானொலி பிரான்ஸின் தலைநகரமான பாரிஸில் இருந்துதான் ஒலித்தது! அந்தத் தமிழ் வானொலியின் முதல் அறிவிப்பாளரும் இந்தப் பிரியாலயம் துரைஸ்தான்.

இவை மாத்திரமல்ல, ஐரோப்பாவில் முதலில் தயாரான "தனிப்புறா" என்ற சின்னத்திரைப் படத்தின் முதல் ஒளிப்பதிவாளராகக் கடமையாற்றியிருக்கின்றார். ஐரோப்பாவில் முதன் முதலில் நகைச்சுவைக்கென "சிரித்திரு" என்னும் சஞ்சிகையை வெளியிட்டவர்!. இவை தவிர இவர் கால் பதித்த கலை, இலக்கியத்துறைகள் இன்னும் பல உண்டு!



கிளிநொச்சி இவரின் தாய் மண். தனது இளவயதுக் காலத்தில் நாடகக்கலைஞனாக, அறிவிப்பாளனாக பிரபலமாகியிருந்த இவர் 1970களில் இலங்கையில் தயாரான "சுமதி எங்கே? என்னும் திரைப்படத்திலும் நடித்திருக்கின்றார்.

பிரான்ஸில் இவரது தயாரிப்பு, நெறியாழ்கையில் "நீதியின் சோதனை" ராஜாவின் ராகங்கள்" என இரண்டு சின்னத்திரைப்படங்களை தானே கதைவசனம் பாடல்களை எழுதி, கதா பாத்திரத்தில் நடித்து, தயாரித்து, இயக்கி வெளியிட்டிருக்கின்றார்.

இவை அனைத்திற்கும் சிகரம் வைத்தது போல அண்மையில் வெளியான "மன்மதன் அம்பு" திரைப்படத்தில் உலக நாயகன் கமலகாஸனுடன் இணைந்து நடித்திருக்கின்றார். பிரான்ஸ், சுவீஸ்,

இத்தாலி போன்ற நாடுகளில் படமாக்கப்பட்ட அந்தப்படத்தில் ஒரு ஓட்டுனராக நடித்திருக்கும் துரைஸ் அவர்கள் அந்தப் பாத்திரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதே ஒரு சுவாரசியமான கதை!

"நடிகர் தேர்விற்காகப் பாரிஸில் இருந்து பல கலைஞர்கள் வந்திருந்தபோதும் தனக்கு இயற்கையாகவே அமைந்திருந்த மொட்டைத்தலைதான் இந்த வாய்ப்பைப் பெற்றுக் கொடுத்தது" எனச் சிரித்தபடி சொல்லுகின்றார் பிரியாலயம் துரைஸ் அவர்கள்.

மன்மதன் அம்பு திரைப்படம் ஐரோப்பாவில் வெளியானவுடன் அவரைத் தெரிந்தவர்கள், தெரியாதவர்கள், கலைஞர்கள், நண்பர்களென அனைவரது தொலைபேசி அழைப்புக்களும் 0145420488 என்ற துரைஸ் வீட்டை நோக்கியே செல்கின்றன வாழ்த்துக்களோடு...

அடுத்தவர்களின் வெற்றிகளை அடுத்த நிமிடமே பாராட்டிவிடவேண்டும் எனத் துடிக்கின்ற இந்த நல்ல இதயத்திற்கு இந்தப் பாராட்டுக்கள் போதுமானது அல்லத்தான்!

ஆனாலும் இவர் அந்தப் படத்தில் பேசியிருந்த ஒரு வசனத்தை மையமாக வைத்துக் கவிஞர் அறிவுமதி அவர்கள் கிளப்பிய சர்ச்சை தமிழ்நாட்டிலும், ஐரோப்பாவிலும் பத்திரிகைகள், வானொலிகள், இணையத்தளங்கள் எனப் பலவற்றிலும் பெரும் சர்ச்சையைக் கிளப்பியிருந்தன. இதுபற்றியும், இவரது கலைத்துறை வாழ்வு பற்றியும் மேலும் அறிந்துகொள்வதற்காகவும் அவரது இல்லத்தில் அவரைச் சந்திக்கின்றோம்.

வணக்கம் துரைஸ்
வணக்கம் வண்ணை அண்ணா.

⇨ *தாங்கள் சின்ன வயதினிலேயே கலைத்துறைக்குள் உங்களை ஈடுபடுத்திக்கொண்டாலும் தங்களின் இருபத்தைந்தாவது வயதில் ஈழத்தில் "சுமதி எங்கே" என்ற திரைப்படத்திலும், தங்களின் ஐம்பதாவது வயதில் இந்தியத் திரைப்படமான "மன்மதன் அம்பு" என்ற திரைப்படத்திலும் நடித்திருக்கின்றீர்கள். இந்த இடைப்பட்ட இருபத்தைந்து வருட காலத்தில் கலைத்துறையில் பலரும் தொட்டிராத பகுதிகளையெல்லாம் தொட்டு பல ஏற்ற இறக்கங்களை எல்லாம் சந்தித்திருக்கின்றீர்கள்! இவையெல்லாம் நீங்கள் திட்டுமிட்டு செய்த முயற்சிகளா? அல்லது காலம் படிப்படியாக உங்களுக்கு முத்தமிட்டு தந்த வரவேற்பா?*

⇨ கலை உலகம் என் காதல் தேசம் பிறரை மகிழ்ச்சிப்படுத்தி நாங்கள் இன்பத்தையும் துன்பத்தையும் சுமக்கும் ஒரு புனித பணிஎன்றே என் அனுபவங்களை வைத்து சொல்வேன். கைதட்டலும் பாராட்டும் பரிசும் ஒரு கலைஞனை வந்து சேரும் போது அதனால் அவனுக்கு கிடைக்கும் மகிழ்ச்சி என்பதை அவனை பல்லாண்டுகாலம் வாழவைக்கும் ஆயுள் தரும் மாத்திரையாகவே நான் பார்க்கின்றேன். பாடசாலை காலத்தில் இருந்தே கலையுலக பாதையை நோக்கியே என் பாதங்கள் நகர்ந்தன அந்தப் பாதையிலே திட்டமிட்டு முடிந்த வரை பல கலைகளையும் ஆழமாக நேசித்து கற்று பயனுள்ள வழியில் செல்வதற்க்கான அனுபவங்களை பெற்றேன்.கலை உலகில் தாயகத்தில் இருபத்தி ஐந்து வயதில் பணம்கொடுத்து சுமதி எங்கே என்ற ஈழத்து தமிழ்ப்படத்தில் நடித்தேன்.
புலம் பெயர் மண்ணில் ஐம்பதுவயத்தில் பணம் வாங்கி மன்மதன் அம்பு படத்தில் உலகநாயகனுடன் நடித்தேன்.

முப்பது ஆண்டுகளுக்கு மேலாக இந்த கலை உலகை நேசித்து வாழ்ந்தமைக்கு படிப்படியாக உயர்வுகள் தேடிவந்து அரவனைத்துக்கொண்டன ஆனந்தம் கொண்டேன். இதய சுத்தம் இருந்தால் எதையும் சாதிக்கலாம் என்பது என் தனிப்பட்ட கருத்தும் நம்பிக்கையுமாகும். அந்த வகையில் எனை தேடிவந்து முத்தமிட்ட வாய்ப்பாகவே உலகநாயகன் கமல்ஹாசன் அவர்களுடனும் உன்னத இயக்குனர் கே.எஸ்.ரவிகுமார் அவர்களுடனும் மன்மதன் அம்பு திரைப்படத்தில் பணி புரிந்ததை வாழ்க்கையில் மறக்க முடியாத அதிஸ்ட்டமாக கருதி மகிழ்ச்சியடைகிறேன்.

திட்டமிட்டு போன பாதைதான் ஆயினும் புகழை அள்ளித்தந்த சரஸ்வதி லக்சுமியை அறிமுகப்படுத்தாமல் வஞ்சனை செய்தமை கொஞ்சம் வருத்தம் தான். இன்னும் உயரங்களை தொடலாம் இதுவரை இறைவனால் கிடைத்த உயர்வுகளை நன்றியுடன் உயரங்களை தொட்டுவிட்ட இன்பம் என்று மனம் நிறைவு கொள்கிறேன்.



➪ அண்மையில் கமல்கா'ன் நடித்து வெளிவந்த "மன்மதன் அம்பு" திரைப்படத்தில் தாங்களும் நடித்திருந்தீர்கள், வாழ்த்துக்கள். முப்பது வருடங்களுக்கு முன்னர் ஈழத்தில் தயாரான "சுமதி எங்கே?" என்னும் படத்திலும் நடித்திருக்கின்றீர்கள். இரண்டு படங்களிலும் நடிப்பதற்கான வாய்ப்புக்கள் கிடைத்தபோதும், படத்தில் நடித்தபோதும், படங்கள் வெளிவந்தபோதும் தங்களது மனநிலை எப்படி இருந்தது? அனுபவங்கள் எப்படி இருந்தது?

➪ அன்றும் மோதிரக்கைதான். இன்றும் மோதிரக்கைதான். "சுமதி எங்கே"? படம் வரவில்லாமல் செலவு செய்த வயதில் பணம் செலவு செய்து நடித்த படம். "மன்மதன் அம்பு" படம் வரவுகளையும், செலவுகளையும், சந்திக்கும் வயதில் பணம் வாங்கி நடித்த படமும் அங்கு அன்றய படம். மூன்றுமாதம் பல காட்சிகளில் நடிக்க வைத்தார்கள் திரையில் மூன்று நிமிடம் கூட என்னை காட்டவில்லை. இன்றைய படம் இரண்டு வாரங்கள் நடிக்க வைத்தார்கள் திரையில் அத்தனை காட்சிகளிலும் என் நடிப்பை மன நிறைவாக காட்டினார்கள். எனது படங்கள் வெளிவந்து திரையில் பார்க்கும் போது நான் ஆசைப்பட்ட காதலி மனைவியாக கிடைத்த போதும் அவளால் எனக்கு கிடைத்த மூன்று பிள்ளைகளையும் அவள் பிரசவித்த உடன் நான் கைகளில் ஏந்தி முத்தம் கொடுத்தபோது கிடைத்த எல்லை இல்லா இன்பம் போன்றே கருதுகிறேன்.

➪ "மன்மதன் அம்பு" திரைப்படத்தில் நடித்ததன் மூலமாக பல திசைகளிலிருந்தும் உங்களுக்கு வாழ்த்துக்களும், பாராட்டுக்களும் கிடைத்திருக்கின்றன. கவிஞர் அறிவுமதி மூலமாக எழுப்பப்பட்ட சர்ச்சையைப்பற்றிய தங்களது கருத்து என்ன?

➪ அறிவுமதி அவர்கள் கூறிய குற்றச்சாட்டு ஈழத் தமிழனை சினிமாப் பைத்தியமாக சித்தரித்திருக்கின்றார்கள் என்பது. உண்மையிலே முப்பது ஆண்டுகளாக நான் ஒரு சினிமாப் பைத்தியம்தான். இந்த நேரத்தில் இன்னொன்றையும் தங்களின் மேலான கவனத்திற்கு நினைவூட்ட விரும்புகின்றேன் நான் மட்டுமல்ல என்னைப்போல இன்னும் பல ஆயிரக் கணக்கான, ஏன் இலட்சக்கணக்கான சினிமாப் பைத்தியங்கள், உலகில் இருக்கின்றார்கள் என்பதையும் தாங்கள் மறுக்கமாட்டீர்கள் என நம்புகின்றேன்.

நான் பிரான்ஸ் நாட்டுக்கு வந்த பின், சினிமாப் பைத்தியம் காரணமாக "நீதியின் சோதனை", "ராஜாவின் ராகங்கள்" என இரு வீடியோப் படங்களை கதை, வசனம் எழுதி, இயக்கி நடித்தேன். இங்கு வெளியான ஏனைய பல படங்களிலும் நடித்துள்ளேன். "மன்மதன் அம்பு" படத்தில் வரும் துரை என்னும் பாத்திரம் எனது சொந்த வாழ்க்கையின் நீண்ட நாள் கனவை நிஜமாக்க உண்மையாகவே, எனக்காகவே எழுதப்பட்டதா? என வியக்கும் வகையில் கதை, வசனம், பாத்திரம் எல்லாமே இந்த சினிமாப் பைத்தியதின் பல காலக் கனவை நிஜமாக்கியது என்பதுதான் உண்மை.

➪ தங்களின் துணைவியார் திருமதி வளர்மதி அவர்களும் கலைத்துறையில் முத்திரை பதித்து வருகின்றார். அன்றைய காலகட்டத்தில் பெண்கள் நடிக்க வருவது மிகமிக குறைவான காலம். பிரான்ஸில் அவர் முதன் முதலில் நடித்தது தங்களுடைய "நீதியின் சோதனை" படத்தில்த்தான். அவருடைய கலைத்துறை நுளைவு விபத்தா? ஆர்வமா?

➪ ஐரோப்பாவின் முதல் வீடியோ படம் திரு. ஞானம் பீரிஸ் அவர்களின் "தனிப்புறா" அப் படத்தின் ஒளிப்பதிவாளராக நானே பணிபுரிந்தேன். உண்மையிலே ஈழத்து கலைஞர்களின் படம் என்ற முழுமையான முத்திரைக்கு, கதாநாயகி இந்தியாவை சேர்ந்தவர் என்பதால் சிறு நெருடல் இருந்தது. இந்த முழுமைக்குள் பிரவேசிக்க வேண்டும் என்ற ஆவலில் முழுமையாக ஈழத்துக் கலைஞர்களை வைத்து "நீதியின் சோதனை" வீடியோ படத்தை எழுதி, இயக்க, திட்டமிட்டு பல ஈழத்து பெண்களை நாடினேன் யாரும் முன் வரவில்லை எனது கனவு கலைந்து விடுமோ? என்று கவலை கொண்ட நேரத்தில் கை கொடுத்தவர் தான் எனது துணைவியார். இது விபத்தா? ஆர்வமா? இரண்டும் இல்லை எனது சுயநலம் என்றே சொல்வேன்.

**⇨ அறிவிப்பாளர், நாடக பிரதியாளர், பாடலாசிரியர், நடிகர், தயாரிப்பாளர், இயக்குனர், பத்திரிகையாளர் இப்படியாக பல்துறைகளிலும் உங்களை இனங்காட்டியிருக்கின்றீர்கள்! இவைகள் எல்லாம் உங்களுக்குப் பிடித்தவைகளாக இருந்தாலும் எல்லாவற்றிலும் வெற்றி பெற்றிருக்கின்றீர்களா?**

⇨ வெற்றி. நல்தோர் கேள்வி இந்த துறைகள் மூலம் பணம் சம்பாதித்தேனா? என்ற பார்வையில் நீங்கள் கேட்டால் வெற்றி பெறவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

பண விஷயத்தை தவிர்த்து கேட்டால், இந்த துறைகள் மூலம் எனக்கு கிடைத்த பரிசுகள், பாராட்டுக்கள், பட்டங்கள், புகழ்,நான் அடைந்த மகிழ்ச்சி அனைத்தையும் வைத்துப்பார்த்தால் மிகப் பெரிய வெற்றி அடைந்துள்ளேன் என்றே சொல்வேன்.

**⇨ தாங்கள் ஆசிரியராக இருந்து வெளியிட்ட “சிரித்திரு” சஞ்சிகை ஆறு இதழ்களுடன் நின்றுபோனது தங்களுக்குத் தோல்வியல்லவா? அப்படியானால் அந்த தோல்விக்கான காரணம்?**

⇨ எங்கள் “சிரித்தரு“ பத்திரிகைக்கு ஐரோப்பா முழுவதும் கிடைத்த அமோக வரவேர்ப்பை அன்று தாங்கி கொள்ளமுடியாத ஒருசிலர் ஈழத்தில் புகழ் பெற்ற ஒரு நகைசுவை பத்திரிகையை வரவளைத்து அந்தப் பெயரில் அதன் சாயலில் கலர் பிரதியாக பிரான்சில் அச்சிட்டு எனது புத்தக விலையின் பாதி விலைக்கு விற்றார்கள் எனது புத்தகம் எனது சொந்தப்பணம். அந்தப் புத்தகம் அவர்களின் பணமா? திட்டமிட்டு அழிக்கப்பட்டது எனது “சிரித்திரு“ பத்திரிகை ஆகவே அதை தோல்வியாக நான் நினைக்க வில்லை.

**⇨ தாங்கள் தயாரித்து வெளியிட்ட “நீதியின் சோதனை” “ராஜாவின் ராகங்கள்” ஆகிய இரண்டு சின்னத்திரைப்படங்களின் அனுபவம் பற்றி?**

⇨ நாடகங்கள் மூலம் எழுத்து இயக்கம், நடிப்பு என அனுபவங்களை பெற்றிருந்தாலும், அன்றைய சூழ்நிலையில் வேலைப்பளுக்களோடு ஒளிப்பதிவையும் நானே செய்யவேண்டி இருந்தாலும் பொருளாதார சிக்கல்களாலும் “ஏன் இந்த விஷப்பரீட்சையில் இறங்கினேன்“ என்று நான் வருத்தப்படதுண்டு. திரைப்படக்கல்லூரியில் எழுதிப்படித்து பெறும் அனுபத்தைவிட “எனக்கு நானே ஆசானாக இருந்து“ நேரடியாக நான் கையாண்ட ஒவ்வொரு துறைகளிலும் உள்ள நெளிவு சுளிவுகளை அனுபவரீதியாக செயல் முறையில் கண்டறிந்தமை நல்லதோர் அனுபவம் என்று சொல்லலாம்.

**⇨ கலைத்துறைக்குள் வந்ததனால் வாழ்க்கையில் வெற்றிபெற முடியவில்லையென எப்பொழுதாவது எண்ணியதுண்டா?**

⇨ “சுனாமி“ நிகழ்ந்த வேளையில் என் மகன் இசைஅமைத்த பன்னிரண்டு பாடல்கள் அடங்கிய “நெஞ்சில் வாழும் பூக்கள்“என்ற இறு வெட்டை (இன்றுவரை) இங்கு உள்ள சில வானொலிகள் கண்டுகொள்ளவில்லை, அந்த சந்தர்ப்பத்தில் ““அப்பா உங்களுக்கு பிள்ளையாக பிறந்ததினால் என்னையும் பழிவாங்குகிறார்கள்““என எனது மகன் கேட்டார். அந்த வேளையில் எனது பிள்ளைக்கு ஏற்பட வேதனையை எனக்கு ஏற்பட்ட தோல்வியாகவே கருதுகிறேன்.

**⇨ உங்கள் கலைவாழ்வில் பொருளாதார ரீதியாக பல இழப்புக்களை சந்தித்திருப்பீர்கள்! வருமானத்தை சந்தித்த நாட்கள் உண்டா?**

⇨ நாடகங்களிலும் சினிமாவிலும் இவை எல்லாம் எதிர்பார்த்ததுதான் ஆனால் அறிவிப்புத்துறையும்,ஆட்ஸ் துறையும் என் இரு கண்கள் போன்றவை நிறையவே சம்பாதித்தேன் இன்றும் அத் துறைகளால் சம்பதித்துக்கொண்டே இருக்கிறேன்.

**⇨ தங்களது பிள்ளைகளும் கலைத்துறைக்குள் நுளைவது குறித்து?**

⇨ என் உதிரத்துடன் கலந்த கலையில் என் உதிரத்தில் பிறந்த என் பிள்ளைகள் இல்லாமலா? முதல் மகன் பிரியதீபன் இசை அமைப்பாளர், அறிவிப்பாளர், பாடகர், நடிகர், இரண்டாவது மகன் பிரியதர்ஷன் கிற்றார் வாத்திய கலைஞர், நடனக்கலைஞர், நடிகர், மூன்றாவதுமகள் பிரியநிலா பரதநாட்டியக்கலை பயின்று வருகிறார் எல்லை கடந்த மகிழ்ச்சி எனக்கு.



➪ தற்பொழுது நீங்கள் ஆரம்பித்திருக்கும் vagul.com இணையத்தளம் பற்றி?

➪ எனது "வர்த்தகர்குரல்" (வகுல்.கொம்) அரசியல் பேசாது உலகை வலம் வந்திடும் கலை, இலக்கிய, விளம்பர, எழுத்து,ஒலி வடிவ தமிழ் இணையத்தளம். இதன் மூலமாகவும் தமிழ் மொழியை வாழவைக்க தொண்டு செய்ய வேண்டும்.

தமிழ் தொலைகாட்சிகளிலும், தமிழ் சினிமாவிலும், தமிழ் அழிந்து கொண்டு போவதால் தாய்மொழி மீதுள்ள பற்று உணர்வு இந்த ஆசை.

➪ தங்களின் எதிர்கால இலட்சியம்?

➪ கால காலமாக சொல்லொனாத் துயரங்களை சந்தித்து வரும் நான் பிறந்த கிளிநொச்சி மண்ணில் உள்ள என் உறவுகளுக்கு பயன் உள்ள வழியில் உதவ வேண்டும் என்பதே.

➪ பொதுவாக கலைஞர்களுக்கு சொல்ல விரும்புவது.........

➪ பேசாத காலப் படங்களையும் மக்கள் பார்த்து ஆதரவு கொடுத்ததினால் தான் பின்பு பேசும் படங்கள் உதயமாகி இன்று சாதனை படைக்கின்றது. எல்லோருக்கும் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு வாய்ப்புகள் அரவணைக்கும் அந்த வாய்ப்பை மனிதம் கொண்டு நன்கு பயன் படுத்தி பயன்பெற வேண்டும்.

நன்றி துரைஸ்.
நன்றி வண்ணை அண்ணா.

## பல் வலியா கவலைப்படாதீர்கள்!

என்ன நாம் பல் வலியாலே துடிச்சுக் கொண்டிருக்கும் போது இப்படி ஏகத்தாளமா அறிவுரையா? இப்படிக் கேட்பதும் உங்கள் கோபமும் புரிகிறது. ஆனால் என்ன செய்கிறது நீங்களும் உங்கள் முப்பாட்டனுக்கு முப்பாட்டனுக்கும் முன்னதாகவே ஏன் மனித இனம் தோன்றும் முன்னாகவே பல்வலி நோய் தோன்றிவிட்டது.

மனித இனமே தோன்றவில்லை என்றால் பல்லும் பல் வலியும் எப்படித் தோன்றமுடியும்? சும்மா கலாய்க்காதீங்க.

கலாய்க்க வில்லை. மனித இனம் தோன்றவில்லை என்றால் உயிரினமும் பல்லும் தோன்றவில்லை என்றாகி விடுமா? 28 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த எக்ச லபடோ சோரியர் என்னும் டினோசார் வகையைச் சேர்ந்த தாவர உண்ணியின் தடை எழும்பை ஆராய்ந்த விஞ்ஞானிகள் அதன் கீழ் தாடையில் உள்ள பல் சொத்தையால் பாதிக்கப்பட்டிருந்தது தெரியவந்துள்ளது.

இப்ப சொல்லுங்க பல் வலியைப்பற்றி நாம் கவலைப்படுவது சரியா?

மளிகை பொருட்கள்,
கடல் உணவுவகைகள்
மற்றும் இறைச்சிவகைகளுக்கும்
நாடுங்கள்
HMH
Asianshop & Trinkhalle
குறைந்த விலையில் தரமான
பொருட்களை பெற்றுக்கொள்ளலாம்
Heinrich Gustav Str. 82
Bochum Werne
Germany
Tel.: 0234 52 84 783

MEDIA ASIA
Another Home of Southasian Channels
For satellite news, live radios,
TV-Guide, Radio schedules, contact
details of Tamil channels in the world etc.
www.mediaworldasia.dk



# பணம் இருந்தால் இப்படியும் செலவு செய்வார்களா?

மனிதரிடம் அளவற்ற பணம் குவிந்து விட்டால் எப்படி எல்லாம் செலவு செய்யலாம்? இதனை அறிந்து கொள்ள உலகின் செல்வந்தர்கள் பெரிதும் விரும்பும் படகுப் பயணங்கள் பற்றிய தகவல்கள் எமக்குப் பெரிதும் உதவும்.

யாரும் பார்க்காத வகையில் தனிமையில் தாம் விரும்பிய படி நண்பர்களோடு குடித்துக் கும்மாளம் அடிக்கவும், தனக்குப் பிடித்த பெண்ணோடு கூடிக் களிக்கவும் கடலிலே படகுப் பயணம் உதவுகிறது. அதுவே சொர்க்கம் என்றும் அதற்காக பணத்தை எப்படித் தண்ணீராய் செலவு செய்கிறது இந்தப் பணக்கார கூட்டம் என்பதையும் பார்ப்போமா?

23 மீற்றருக்கும் கூடுதலான நீளம் கொண்ட அதி உல்லாசப் படகுகள் முதல் 100 மீற்றருக்கும் கூடுதலான நீளம் கொண்ட மிதக்கும் மாளிகைகள் வரை தம்மிடம் இருக்கும் பணத்துக்கும் மனதின் கற்பனைக்கும் ஏற்றவாறு இவை வடிவம் பெறுகின்றன.

இந்த வகையில் முதலிடம் பெறுகிறது றைசிங் சன் (உதய சூரியன்) என்ற 138 மீற்றர் நீளம் உள்ள 270 மில்லியன் டொலர் விலையில் வாங்கப்பட்ட இதை படகு என்பதை விடவும் கப்பல் என்பதே பொருத்தமாக இருக்கும். 5 மாடிகள் கொண்ட தளமும் 82 அறைகளையும் கொண்ட மிதக்கும் மாளிகை 48,000 குதிரை வலுக் கொண்ட எந்திரங்கள் கொண்டுள்ளது. இது மணிக்கு 28 கடல் மைல் வேகத்தில் ஓடவல்லதும் உலகின் எந்தக் கடல் பகுதியிலும் செயற்படக் கூடிய, இந்த இராட்சதப் படகின் சொந்தக்காரர் அமெரிக்க சினிமாப் படத் தயாரிப்பாளர் டேவிட் கெவ்வன் ஆவர்.

அவருக்கு அடுத்தபடியாக குறிப்பிடத்தக்கவராக இருப்பவர், 126 மீற்றர் நீளமான ஒக்ரோபஸ் என்ற பெயரோடு ஒராக்கிள் என்ற கணிணி நிறுவனத்தின் நிறுவனரும் முன்னர் மைக்குறோ சொவ்ற் நிறுவனத்தின் கூட்டு நிறுவனருமான போல் அலன் ஆவர். இந்தப் படகு 19,000 குதிரை வலு கொண்ட இயந்திரத் தொகுதியையும் 40 பில்லியன் டொலர் பெறுமதியும் கொண்ட மிகப் பெரும் சொகுசு நிறைந்த படகாகும். இத்துடன் 2 உலங்கு வானூர்திகளும், 19 மீற்றர் நீளமான அதி வேகப் படகும், 1 நீர் மூழ்கியும் இவரது கடலில் மிதக்கும் செல்வமாகும்.

அடுத்ததாக 120 மீற்றர் நீளமான எல்.ஈ.120 என்ற தன் பெயரின் முதல் எழுத்துக்களோடு படகின் நீளத்தையும் பெயராக கொண்டுள்ள படகின் சொந்தக்காரர் லாரி எலிசன் என்னும் பல அபூர்வ ஆசைகள் உள்ள உல்லாசி. பட்டத்தில் பறந்து அமெரிக்க கிளப்பின் வெற்றிக் கிண்ணத்தையும், காரோட்டப் பந்தயத்தில் மக்லாரன் பார்முலா 1ல் பங்கெடுத்தும் அதே போன்று போர் விமானம் ஓட்டியும் தமது பல திறமைகளை வெளிப்படுத்தியவர்.

இதோ இந்த ரஸ்ய செல்வந்தரைப் பாருங்கள். உலகின் மிக நீளமான 163 மீற்றர் நீளம் கொண்ட எக்கிலிப்ஸ் (கிரகணம்) என்ற பெயரோடு ரஸ்யரான அப்ரமோவிச் 400 மில்லியன் யூரோவிலையில் டுபாய் சேக்கிடமிருந்து 2008ல் வாங்கி உள்ளார். இவர் இந்தப் படகில் பப்பிராசிகள் எனப்படும் அனுமதியின்றி அந்தரங்கமாகப் படங்களைப் பிடித்துப் பெரும் புள்ளிகளுக்குத் தொல்லை கொடுக்கும் படப்பிடிப்பாளர்கள் கூட்டத்தை விரட்டுவதற்காக லேசர் ஏவுகணைத் துப்பாக்கிகளைப் பொருத்தி உள்ளார். இங்கிலாந்தின் செல்சியா கால் பந்துக் கழகத்தை விலை கொடுத்து வாங்கிய முதலாளியும் இவரே.

இவரது இன்னொரு படகு உலகின் மிக விலை உயர்ந்த பெருமை கொண்டுள்ள பெலோரஸ் என்ற பெயரோடு உள்ளது. 2004ல் ஒரு சேக்கிடமிருந்து 300 மில்லியன் டொலருக்கு வாங்கி, பின்னர் 12 மில்லியன் யூரோ செலவில் அழகுபடுத்தி உலகின் மாபெரும் படகு வரிசையில் இடம் பெற்றிருக்கிறது.

ரஸ்ய செல்வந்தர் இவ்வளவு செய்தால், ரஸ்ய அதிபர் டிமிற்றி மெற்மெடொவ் சும்மா இருக்கலாமா? அளவில் மற்றவைகளோடு ஒப்பிடுகையில் சுண்டைக்காய், அதன் நீளமோ 54 மீற்றர். ஆயினும் 24 பேர் கும்மாளம் போடவும் மேலதிகமாக ஆறு பேர் பயணிக்கவும் இடம் உள்ளது. 34 மில்லியன் யூரோவில் வாங்கப்பட்ட இந்தப் படகு, ஏழைக்கு ஏற்ற எள்ளுருண்டை என்பதை எமக்கு நினைவூட்டுகிறது அல்லவா?

இவை போல் பணக்காரர் சமாச்சாரம் எத்தனையோ வகை. இதிலே படகில் ஆஹா இன்ப நிலாவினிலே ! ஓஹோ ஜெகமே ஆடிடுதே...! எனப் பாடுவதும் ஒரு வகைதானே!


S.K. Silks & Gold Paradise

மங்கையர் மனதை கொள்ளைகொள்ளும் பட்டுச்சேலைகள் யுற்றொப்ஸ், சிமோக், லேஸ், நெற்ஸ், லேசர் ரிசு சேலைகள் அனார்கலி, பட்டியாலா பஞ்சாபிகள், பாவாடைத்தாவணிகள் காகிறாச் சோலிகளுடன் ஆடவர்கள் சிறுவர் சிறுமியர்களுக்கான ரெடிமேட் ஆடைகளையும் இங்கு பெற்றுக்கொள்ளலாம்.

இவை மட்டுமல்ல, 22கரட் உத்தரவாதம் பதிக்கப்பட்ட தங்க, வைர நகைகளை நவீன டிசைன்களுடன் ஒரே கூரையின் கீழ் பெற்றுக்கொள்ளலாம்.

200 யூரோக்களுக்கு மேல் சேலைகள் கொள்வனவு செய்பவர்களுக்கு சேலை பிளவுஸ் இலவசமாகத் தைத்துக் கொடுக்கப்படும்!

Adler Str. 33 | Tel: 0231/9501647
44137 Dortmund | Fax: 0231/9501648

# சங்கிலியன் சிலைக் கைவாள் சிங்களத்தை சினக்கச் செய்கிறதாம்!



யாழ்ப்பாணத் தமிழ் அரசின் மன்னனாக முதலாம் சங்கிலியன், பரராசசேகரன் என்ற பட்டப் பெயரோடு கி.பி.1519 முதல் 1561 வரை யாழ்ப்பாணம் நல்லூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தான். கொழும்பில் சிங்கள அரசுகள் போர்த்துக்கீசரின் தயவில் ஒன்றை ஒன்று முட்டி மோதி ஆட்சி நடத்துகையில் யாழ்ப்பாண அரசு அந்நிய ஆதிக்கத்தை ஏற்காது சுதந்திரமாக இயங்கியது.1540 முதல் சங்கிலியனுக்கும் போர்த்துக்கீசருக்கும் மோதல்கள் உருவாகியும் அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்த முதல் இலங்கை அரசு யாழ்ப்பாணத் தமிழரின் அரசு என்ற பெருமை பெற்றவன் சங்கிலிய அரசன்.

அதே மரபில் அடிமைப் பட்ட இலங்கையில் முதல் விடுதலைக் குரல் எழுப்பிய பெருமை 1920 களில் உருவான யாழ்ப்பாணத் தமிழ் இளைஞர் சபையே. அதுவும் வடக்கு கிழக்கின் விடுதலை பற்றியே இருந்தது. அன்று இலங்கை என்ற தத்துவத்தைக் கொழும்பிலிருந்து பொன்.அருணாசலம் யாழ்ப்பாணத்துக்கு இறக்குமதி செய்யாது இருந்திருந்தால், தமிழரின் தலைவிதி இறையாண்மை கொண்ட தனித் தமிழ் அரசாக சீரும் சிறப்பும் கொண்டு இன்று ஐ.நா. அங்கத்துவ நாடாக விளங்கியிருக்கும். அன்று ஒரு அருணாசலமாக இருந்த நிலை மாறி இன்று கருணா, பிள்ளையான், டக்ளஸ், கே.பி, தயா மாஸ்ரர் எனப் பெரும் பட்டியலே சிங்களத்தோடு சேர்ந்து தமிழருக்குப் பாடம் நடத்துகிறார்கள்.

சங்கிலி அரசனின் சிலையின் கையில் உள்ள வாள் அந்நியரைத் தன் மண்ணில் இருந்து விரட்ட ஏந்திய வீர விடுதலை பேசிய வாளே அல்லாது சிங்களத்தின் கொடியில் உள்ள சிங்கத்தின் காலில் தொங்கும் ஆக்கிரமிப்பு வாள் அல்ல. இருந்தும் இன்று வருகை தரும் தமிழனை வெற்றி கொண்ட சிங்கள ராசப் பிரதானிகளுக்கு இந்த வாள் மன உளைச்சலைத் தருகிறதாம்.

இந்த வாள் இப்போது மானம் கெட்ட யாழ் நகர பிதாவின் கழுத்தின் மீது நிற்கும் நிலையில் சங்கிலியன் சிலை இடிக்கப் பட்டு அழகான புதிய சிலை இந்தியச் சிற்பிகளின் கை வண்ணத்தில் வரும் என்ற அறிவித்தல் வேறு வெளியாகி உள்ளது.

அது என்ன அழகான சிலை? இந்தியச் சிற்பிகள்? என்ற அலங்கார வளைவுகள்? இப்போது உள்ள சங்கிலியனின் சிலை அழகில்லை என்ற ஒரு கருத்தூட்டலும் இந்தியச் சிற்பிகள் என்ற சர்க்கரைப் பொங்கலும் யாருக்காக யாருடைய உபயத்தில் வழங்கப்படுகிறது, இந்தப் பிரசாதம்? ஒரு வேளை பெயருக்கு ஏற்ப புதிய சிலையின் கைகள் சங்கிலிகளால் கட்டப் பட்டிருக்குமோ?: அல்லது சைக்கிள் செயினோடு பேட்டை ரவுடியாகக் காட்சி தருமோ யார் கண்டார்?

தமிழரின் தன்னாதிக்க இறையாண்மை கொண்ட ஆட்சி அதிகாரத்தின் வரலாற்று ஆதாரத்தை தமிழர் மண்ணிலும் மனங்களிலும் இருந்து முற்றாக அழித்துவிட சிங்களப் பேரினவாதம் நடத்தும் தமிழின அழிப்பின் மற்றொரு வடிவம்தான் இது.

இலங்கையில் தமிழினம் பூர்வீக குடிகள் அல்ல என்ற கருத்தாக்கத்தை சிங்களம் வலியுறுத்துவதன் மூலம் தமிழரை தாயகம், தேசியம், தன்னாட்சி இறையாண்மை கொண்ட இனம் எனக் கருதமுடியாது என்ற வாதத்துக்கு வலுச் சேர்க்க முனைகிறது.

அத்தகைய முனைப்பின் முன்னெடுப்பாகவே இன்று சங்கிலியன் சிலையின் கைவாளைச் சிங்களம் பார்க்கிறது. தமிழரின் சிந்தனையில் விடுதலை உணர்வு இல்லாது ஒழிக்க வேண்டும். அதன் அதிரடி விளைவே மாவீரர் துயிலும் இல்லங்களை இராணுவம் அழித்து மண் மேடாக்கிய செயல்.

நாளை நமது கடவுள் சிலைகளில் உள்ள வில், வேல், வாள், சூலம் என்பனவும் எமது சிங்கள இராசாக்களுக்கு மன உளைச்சலை ஏற்படுத்தலாம். அதற்காக எமது தமிழ் அரசியல் பூசாரிகளும் தட்சணை வாங்காமலே தர்ப்பையும் காளாஞ்சுகளும் தந்து தமிழ் மக்கள் தோப்புக் கரணமும் அங்கப் பிரதட்சணமும் போட வேண்டும் என்பார்கள்.

தமிழர் கதை எல்லாம் இனிமேல் கோவிந்தாதான்!

---


# SAI TRADER

சுவிஸ் நாட்டில் மொத்த விற்பனையாளரும், ஏக வினியோகஸ்தரும்.

## SAI TRADER GmbH

FRISCH - EXOTISCH - AROMATISCH

Raaterstrasse 24
CH 8175 Windlach
Switzerland
Tel.+41 44 885 86 50
Fax.+41 44 885 86 51
Cell.+41 79 218 70 75
www.saitrader.com



# இல்லத்தரசிகளின் உள்ளங்கள் நாடும் மளிகை ஸ்தாபனம்

# VS CO CASH & CARRY



197, rue du Fbg St· Denis
75010 Paris
France

Tel: 01 40 34 71 65
Fax: 01 53 26 72 04



we deliver a wide range of fruit, vegetable and grocery items, food items, non food items, dairy & frozen, soft drinks, see food items, fresh meat, sweet items, kitchen appliances, non kitchen items.

VS·CO Cash & Carry

VS·CO
L'EPICERIE INDIENNE

தினமும் தள்ளுபடி விலையில் தரமான பொருட்களைப் பெற்றுக்கொள்ள இன்றே நாடுங்கள்

VS CO CASH & CARRY






50ஈரோவிற்கு மேல் பொருட்களை வாங்கும் அகரம் வாசகர்களுக்கு 5%* சிறப்புத் தள்ளுபடியும் உண்டு!
இந்தக் கூப்பனை வெட்டிக் கொடுக்கவும்.

*அரிசி / மது வகைகளுக்கு இக் கூப்பன் செல்லுபடியாகாது.



# உள்ளாட்சி அமைப்புத் தேர்தல் - வெற்றி யாருடையது?

ஆயுதப் போரில் முள்ளி வாய்க்காலில் மகிந்த அரசு பெற்றது சிங்களத்தின் வெற்றி என்றால், முள்ளி வாய்க்கால் உள்ள அதே வட தமிழீழத்தில் உள்ளாட்சித் தேர்தற் போரில் தன் இறையாண்மையை தமிழன் உலகுக்குக் காட்டியது இந்த வெற்றி. இந்த வெற்றியை தமிழர் தேசியக் கூட்டமைப்பின் வெற்றியாகவே கூட்டமைப்பும் அதன் ஆதரவாளர்களும் எண்ணிப் பெருமைப் படுகின்றனர்.

ஆனால், அவர்கள் தமிழ் மக்களுடன் எந்த அளவுக்கு ஒன்றித்துச் செயற்பட்டனர் என்பது அனைவரும் பதில் தேட வேண்டிய கேள்வி. த.தே.கூ. ஒரு பதிவு செய்யப்பட்ட அரசியல் கட்சி அல்ல. அதில் எத்தனை பங்காளிகள் உளரோ அத்தனை பேருக்கும் முக்கிய பதவிப் பங்கீடு தீராத பிரச்சனையாக உள்ளது. அதே காரணத்தால் தமிழரசுக் கட்சியின் பெயரிலும் சின்னத்திலும் கூட்டமைப்பு போட்டி இட்டது என்பதே உண்மை. அவர்கள் தமது தனிப்பட்ட காரணங்களுக்காக வெளியில் த.தே.கூ. எனக் கூறினாலும் தேர்தல் முடிவு அறிவிப்புகள் இலங்கைத் தமிழரசுக் கட்சி எனவும் அதன் வீட்டுச் சின்னத்துடனும் ஊடகங்களில் வெளியானதை யாரும் மறுக்க முடியாது.

த.தே.கூட்டணியின் அமைப்பும் அதன் அரசியல் செயற்பாடும் தமிழர் தேசியம் நோக்கியதாக இல்லை என்பது, பல தடவைகள் அதன் செயற்பாடுகள் வெளிப்படுத்தி உள்ளன. கூட்டமைப்பில் முக்கிய பங்காளிகளாக இருக்க வேண்டிய இஸ்லாமியத் தமிழரின் இடம் வெறுமையாகவே இருக்கிறது. மலையகத் தமிழரின் இடமும் வெறுமையாகவே இருக்கிறது. இப்படியான ஒன்றை வடக்குக் கிழக்குத் தமிழர் தேசியம் என்றால் எவர் ஏற்பர்? புலிகளைத் தமிழரின் ஏகப் பிரதிநிதிகள் என உலகின் முன் நிறுத்த முயன்றமையும் அதன் வீழ்ச்சிக்கு ஒரு காரணம் எனலாம். அதே நிலையை த.தே.கூ. எப்படி இத்தனை ஓட்டைகளுடன் எதிர் கொள்ளமுடியும்?

புலிகளின் அழிவோடு, தமிழரின் அரசியல் அபிலாசைகளின் வெளிப்பாடாக த.தே.கூ. தோற்றம் பெறத் தவறியதோடு தமிழ்த் தேசியத்தின் குரலாக ஒலித்த ஜெயானந்த மூர்த்தி, பத்மினி சிதம்பரநாதன், கஜேந்திரகுமார், சிவாஜிலிங்கம் ஆகியோர் வெளியேற்றப் பட்டனர். புலிகள் கேட்டதை யாரும் கேட்கக் கூடாது என்ற சிங்களத் தரப்பின் மிரட்டல் தீவிரமானது. அந்த மிரட்டலுக்குப் பணிவது போல் த.தே.கூ. தனது அரசியல் கோரிக்கையை மாற்றியமையை அதற்கான தேவை கருதி மன்னித்தும் விடலாம்.

ஆனால் தமிழரின் 80 வருடகால அரசியல் அபிலாசைகளையும் தாயகப் பிறப்பு உரிமைகளையும் விட்டுவிட முடியுமா? அரசியல் உரிமைகளைப் பேசாமலே போருக்குப் பின்னான காலத்தில் தமிழ் மக்களின் நிவாரணம் மீள் குடியமர்வு சிறைப்பட்ட மக்களின் விடுதலை என எத்தனையோ மனித உரிமை விடயங்களை சர்வ தேச அரங்குக்கு எடுத்துப் போய் சிங்களத்தை எதிர்கொள்வதை விடுத்து சிங்களம் காட்டிய தேர்தல் சகதிக்குள்

தமிழ் மக்களை இழுத்துப் போனது ஏன்?

அரசியல் கைதிகளை விடுவிக்க திரு. விநாயகமூர்த்தி ஒருவரே த.தே.கூ. சார்பில் சட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டார் என்பதைத் தவிர மற்றவர் எவரும் தலை காட்டியதில்லை. தடை முகாம், மற்றும் வதை முகாம்களில் வாடுவோர் பற்றிய விபரம், விடுதலை என்பனவற்றைச் சர்வதேச சமூகத்துக்குத் தமிழ் மக்களின் பிரதி-நிதிகள் எடுத்துச் செல்ல வேண்டிய நேரத்தில் அவர்கள் மகிந்தவின் தேர்தல் வித்தைகளுக்குள் தமிழ் மக்களை இழுத்துப் போயினர். நேர்மையான தேர்தலுக்கான சூழலும் தமிழர் மன நிலையும் ஏற்றதாக இல்லை என தேர்தலை மறுக்க வேண்டியவர்கள் சிங்களத்துக்காகத் தேர்தல் வாக்குக் கேட்டுத் தமிழ் மக்களின் வெறுப்பையும் விரக்தியையும் தேடியது ஏன்?.

கொள்ளிக் கட்டையால் முதுகைச் சொறிவது போன்று செம்மணிப் படு கொலைகளுக்கும் முள்ளி வாய்க்கால் பேரவலத்துக்கும் காரண-மான சிங்கள இராணுவத் தளபதி சரத் பொன்சேகாவுக்காகத் தமிழ் மக்களிடம் வாக்குக் கேட்டனர்.

இன்று இவர்கள் கூறிப் பெருமைப்படும் வெற்றி, சிங்களப் படையின் காலடியில் நசுக்குண்டு கிடக்கும் தமிழனுக்குள் சங்கிலியன் சிலை உடைப்பும் மகிந்தவின் தலைமையில் சிங்கள மந்திரிகளின் கூட்டம் அவர்கள் அடித்த கும்மாளமும் ஏற்படுத்திய வெறுப்பால் எழுந்த மௌனப் புரட்சி என்பதே உண்மை.

“கெட்டாலும் செட்டி கிழிஞ்சாலும் பட்டு“ என்ற முது மொழி இந்த விடயத்திலும் நிரூபணமாகித் தமிழ் இனத்தின் சிந்தனைத் தெளிவுக்கு சாட்சியமாகத் திகழ்கிறது. தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் சிந்திய வியர்வை, இரத்தம், உயிர், உடமை இழப்புகள், தியாகம் என்பன கடல் அளவு என்றால், அந்தக் கடலின் தோற்று நிலமாக, தாங்கும் தரையாக அகில இலங்கைத் தமிழரசுக் கட்சி இருந்தது என்பது பழைய வரலாற்றோடு வாழ்ந்து போராடிய கட்சித் தொண்டர்களுக்கு மட்டுமே தெரிந்த உண்மை.

த.தே.கூ. தலைவர் திரு.இரா.சம்பந்தனின் தந்தையார் திரு.இராஜவரோதயம் தமிழரசுக் கட்சியின் தலைவராக இருந்த காலத்தில் த-மிழரின் அரசியற் கோட்பாட்டுக்கு அமைவாக வடக்கும் கிழக்கும் ஒன்றாகச் செயற்பட்டன. சிங்கள அரசுக்கு எதிரான தமிழ் மக்கள் உண்ணா நோன்புப் போர் நடத்திய 1960களில் வடக்கும், கிழக்கும் இந்துக்கள், கிறிஸ்தவர், இஸ்லாமியர் எனத் தமிழ் அரசுக் கட்சி உண்மையான தமிழரின் தேசியக் கட்சியாக விளங்கியது. அந்த விளை நிலத்தில் நாற்றுகளாக முளைத்ததே தமிழீழ விடுதலைப் போராட்டமும் பல் வேறு போராட்டக் குழுக்களும்.

அப்படிக் குழுக்கள் ஆனவர்கள் மீண்டும் ஒரே கொள்கையில் இணைந்து போராடாது ஒருவரை ஒருவர் காட்டிக் கொடுத்து தமிழ் இனத்தை இன்றைய தரித்திர நிலைக்குக் கொண்டு வந்து விட்ட பெருமை உயிரோடு இருக்கும் எம் அனைவருக்கும் உண்டு. ஆயினும் தமிழரசுக் கட்சியின் தன்மான அரசியல் இன்று த.தே. கூட்டமைப்பின் தமிழ் மக்கள் மத்தியில் மட்டும் பேசு பொருளாக உள்ளது.

மகிந்தரும் ஏனைய சிங்களவர்களும் புலிகள் கேட்டதையும் பேசியதையும் கேட்கவோ பேசவோ செய்தால் உயிர் இருக்காது என்ற வெளிப்படையான அச்சுறுத்தல் விடுக்கின்றனர். த.தே.கூ. ஒரு கட்சியாகப் பதிவு செய்யப்படாமைக்கு அதன் பங்காளிகளுக்குள் இருக்கும் பதவிப் பசிக்கும் அப்பால், இன்று உள்ள சட்ட விதிகளின் படி புதிதாக அரசியல் கட்சியாகப் பதிவு செய்யப் போகும் போது தமி-ழர் தரப்பின் பழைய அரசியல் அபிலாசைகளை உள்ளடக்கிய கொள்கைகளுடன் கூடிய கட்சியாக பதிவு செய்வது சாத்தியம் இல்லை என்பதே உண்மை. ஆனால் இதைத் தமிழ் மக்களிடம் இவர்களால் வெளிப்படையாகக் கூறமுடியாது.

மக்களோடு மக்களாக 1961ல் இருந்தே வடக்கிலும் கிழக்கிலும் அறவழிப் போர் நடத்திய ஆளுமையை தமிழரசுக் கட்சி 1965ல் டட்லியோடு தேசிய அரசு அமைத்துச் சோரம் போய் விட்டதோடு இழந்து விட்டது. தனிப்பட்ட மனித குரோதங்கள் வடக்கையும் கிழக்கையும் பிரிக்கக் காரணம் ஆயின. எம்மோடு இணைந்து போராடிய இஸ்லாமிய அரசியல் வாதிகளையும் நாம் இழந்து விட்டோம்.

இவ் அனைத்துப் பெருமைகளுக்கும் உரிய கட்சியாக 1952ல் பதிவானதும் தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகள் என்ற ஆணிவேருக்கு உரிமை பாராட்டும் தகுதியும் உள்ள தமிழ் அரசுக் கட்சி தமிழ் மக்களில் ஆழமாக ஊறிப் போய் விட்டதே இன்று சிங்களத்தின் முள்ளி வாய்க்கால் வெற்றிக்குப் பதில் அடியாக விழுந்துள்ளது. இந்த வகையில் தேர்தல் முடிவை முன்வைத்து, தமிழரின் தேசியம், தன்னாட்சி,

இறைமை, தாயக உரிமைகளை விட்டுக் கொடுக்காமல் தமிழினத்தின் அரசியல் வருங்காலத்தை முன்னெடுத்துச் செல்லும் ஆற்றல் த.தே.கூட்டமைப்புக்கு இருக்கிறதா?

இன்றும் பல பல்கலைக்கழக பேராசிரியர்கள் உட்பட நல்லவர்கள் பலரைக் கொண்ட தமிழரசுக் கட்சியின் நேற்றைய தலைமுறையின் மிச்ச சொச்சம் உள்ளது. இவர்களில் பலர் அமைதியான செயலற்ற நிலையில் உள்ளனர். இவர்களின் அறிவும் அனுபவமும் தன்னலமற்ற சேவையும் எமது மக்களின் அரசியல் எதிர்காலத்தை வகுத்துக் கொடுப்பதற்குப் பயன்பட வேண்டும்.

தன்னை ஒரு அரசியல் கட்சியாக வெளிக்காட்ட முடியாத த.தே.கூ. புலிகளின் பலம் உள்ளவரை கொலுவிருந்தது போல் இனியும் இருக்க முடியாது. ஏற்கனவே பலமும் வரலாறும் கொண்டிருந்த தமிழ் அரசுக் கட்சியில் இவர்கள் இணைந்து போராடினால் மட்டுமே சமஷ்டி என்ற கோரிக்கையையாவது முன்னெடுக்க முடியும்.

1959ல் பிரதேச சபை, 1965 மாவட்ட சபை, 1977ல் தனித் தமிழீழம், 1987ல் மாகாண சபை, 1990ல் தனித் தமிழீழம் நோக்கிப் போராடிய தமிழினம் 2011ல் கிராம சபைகள் என மீண்டும் 1910 களுக்கே தமிழினம் பின் தள்ளப்படும் நிலைக்கு வந்து விட்டது. இப்போதே அதன் நியமன உறுப்பினரும் சட்ட ஆலோசகருமான திரு.சுமந்திரன், புலம் பெயர் தமிழர்களும் போர்க் குற்ற விசாரணைக்கு உட்படுத்தப் படலாம் என வாழைப் பழத்தில் ஊசி ஏற்றி தமிழர் போராட்டத்தை நோய்ப் படுக்கையில் போட்டுவிட நினைக்கிறார்.

இப்படியான மனப்பான்மை உள்ளவர்களைக் கொண்டுள்ள த.தே.கூ நம்புவதை விட, தமிழ் அரசுக் கட்சியை தமிழ் மக்கள் உரமிட்டு வளர்ப்பது அதிக நன்மை தரும் என்பது எமது கருத்தாக உள்ளது.

## தீராநதி ஒரு பார்வை

கே.பி.லோகதாஸ்

திரை கடல் ஓடியும் திரைப்படம் எடு என்பது "தீராநதி திரைப்படக் குழுவினருக்கு பொருந்திப் போகின்ற வாசகம்!

கடந்த 09.07.11 இலும் 10.07.11 இலுமாக இரண்டு நாட்களும் நான்கு காட்சிகளும். பின்னர் 16.07.11 அன்றும் (பாரிஸ்) ஒபெவில்லியர் திரையரங்கில் தீராநதி திரையிடப்பட்டது.

உண்மையில் அசத்தித்தான் இருக்கின்றார்கள்! நம்மவர் சினிமாவின் நம்பிக்கை நாயகர்களான தீராநதி திரைப்படக் குழுவினர்.

நம்மவர்கள் படைப்புகளில் தவறை மட்டும் கண்டுபிடிக்க முனையும் ஒருசிலரின் குறைகாணும் தேடலுக்கு அதிக இடமளிக்காமல் குறைகளைக் குறைத்து நிறைகளை நிறைத்திருக்கின்றது இந்தத் திரைப்படம்.

அசத்தலான திரைக்கதை! விறுவிறுப்பான படத் தொகுப்பு! நேர்த்தியான படப்பிடிப்பு! பிரமிப்பூட்டும் பின்னணி இசை! நடிகர்கள், நடிகையின் யதார்த்தமான நடிப்பென்று நம்பிக்கை ஒளிபரப்பி நிற்கின்றது பாஸ்கரனின் இயக்கத்திலான இந்தத் தீராநதி.

90 நிமிடங்கள் ஓடும் இத் திரைப்படம் பார்வையாளர்களை இருக்கையை விட்டு நகரமுடியாமல் அப்படியே கட்டிப்போடுவதோடு புலத்தின் நிஜத்தின் ஒரு பகுதியை சொல்லியிருக்கின்றது.

இந்தப் படத்தில் திரைப்படத்துறையை தனது சுவாசமாகக் கொண்ட மூத்த கலைஞர் ஏ.ரகுநாதன் அவர்களும் அற்புதமாக நடித்து சிறப்பித்திருக்கின்றார்.

ஈழத் தமிழர்களின் அடையாளச் சினிமாக்கள் புலத்தில் இருந்துதான் வரவேண்டும் என்ற ஆதங்கம் எல்லோரது எண்ணங்களிலும் வரும் பட்சத்தில் அதை நிஜமாக்கும் இளைஞர்களை ஒற்றுமையாக ஊக்குவிப்போம், உற்சாகப்படுத்துவோம்.

தமிழக சினிமாக்கள் புலத்தில் வாழும் தமிழர்களின் பொருளாதாரத்தில் தங்கியிருக்கையில் நம்பிக்கை தரும் நம்மவர் சினிமாக்கள் நலிந்து போகலாமா?

தமிழகத்தின் சினிமாக்களை திரையிடப்பட்ட அன்றே பார்த்துவிடத் துடிக்கும் சினிமா இரசிகர்களே, நம்பிக்கையோடு இந்தப் படத்தையும் பார்க்கலாம். படம் பார்க்கச் செல்லும்போது மறவாது உங்கள் நண்பர்களையும் அழைத்துச் செல்லுங்கள்.

# எல்லோர்க்கும் ஈழமண் சொந்தம்...!

அறிவழகன்

நம்மில் பலர் புலம்பெயர் நாடுகளில் அகதித்தஞ்சம் கோரி வாழ ஆரம்பித்து முப்பது ஆண்டுகளுக்கும் மேலாகிறது. கிட்டத்தட்ட இது கால்நூற்றாண்டுக்காலம். இப்போது இரண்டாவது தலைமுறையும் ஆகிவிட்டிருக்கும் நிலை. தமிழீழ மண்ணிலிருந்து பெயர்ந்து, அந்நியமண்ணின், கலாச்சாரங்களை எம்முள் திணித்துக்கொண்டு,சீரற்ற காலநிலைக்கும், கட்டுப்பாடுகளுக்கும் எம்மை பழக்கப்படுத்திக்கொண்டு, வாழ்ந்துகொண்டிருக்கும் அசாத்திய திறமையுடையது நம்மினம். இனி எப்படியோ வாழையடி வாழைதான் என்றாலும், எதிர்வரும் தலைமுறைகளுக்குத் தமிழும், தமிழினம் சார்ந்த காலாச்சாரமும் ஒத்துப்போகுமா என்பது கேள்விக்குறி..தமிழின அழிப்பைச் சிங்களம் செய்துகொண்டிருக்க, புலம்பெயர்ந்த மண்ணிலும் ஒரு அமைதியான இனஅழிப்பு நடைபெற்றுகொண்டிருகிறது என்பது வேதனையான உண்மை.ஆழ்ந்து சிந்திக்குமிடத்து, தமிழினத்தின் விடுதலை, தமிழர்களாலேயே வேருடன் பிடுங்கி எறியப்படும் நிலையிலிருக்கிறது என்றால் அது மிகையில்லை.

எவ்வளவுதான் தமிழின விடுதலை பற்றி வாய்கிழியப் பேசினாலும் யதார்த்த வாழ்விற்கு ஒத்துப்போகாத செயற்பாடுகளும், நம்மை நாமே நேர்மையானவர்களாகச் சித்தரித்துக்கொள்ளும் கீழ்த்தரமான ஒருவழிப்பாதையும் எப்போதுமே நமது இனத்தின் சாபக்கேடு, இதில், நாய்க்கும் நமக்கும் எவ்வளவோ ஒற்றுமைகள். சுயநலத்திற்காக, நாம் சார்ந்தவர்களைக் கண்டவுடன் வாலாட்டுதல், நமது வீட்டின் பாதுகாப்பிற்காக மட்டும் சத்தமிடுதல், இனத்திற்கு வரப்பிரசாதமாய் ஏதுமொன்று கிடைக்குமிடத்து, பாய்ந்து கவ்விப் பறித்தெடுத்து, அதை இல்லாது செய்தல், தானும் படுக்காது, தள்ளியும் படுக்காதிருக்கும் நிலை, பழக்கப்பட்டவன் ஊளையிடும்போது, என்ன ஏதென்று கேட்டறியாது அவனுக்காக ஊளையிடுதல், எனப்பல நிலையில், நாய்க்குணம் கொண்ட மனித உருவங்களாக வாழ்ந்துகொண்டிருக்கின்றோம் என்பதே உண்மை. இதே நிலை இனிவரும் சந்ததியிலும் தொடருமாயின் ........??!!

ஒருதமிழ்ச்சிறுமியுடன் ஒருநாள் சற்று உரையாடக்கிடைத்தது, ஒரு கதைசொல்லும்படி கேட்டேன், 'ஒரு ஏரிக்கரையில் முதலை ஒன்று, அங்க தண்ணி குடிக்க வாற ஆடு, மாடுகளைப் பிடிச்சுத் தின்னுறதுக்காக நித்திரை கொள்ளுறது போல நடிச்சுக்கொண்டு, படுதிருந்திச்சாம்.அப்ப, அங்க ஒரு மாடு தண்ணி குடிக்க வந்திச்சாம்,அங்க இருந்த முதலையைக்கண்டுட்டு, அது உண்மையா நித்திரை கொள்ளுதா எண்டு பாக்கிறதுக்காக, எங்கட ஊர் முதலை எல்லாம், நித்திரை கொள்ளேக்க வாலை ஆட்டிக்கொண்டுதான் படுக்குமெண்டு, மாடு பெரிசா சத்தம் போட்டுச்சொல்லிச்சாம், முதலை அதை நம்பி வாலை ஆட்டிச்சாம், அப்ப மாட்டிற்கு, முதலையின்ட கள்ளத்தனம் தெரிஞ்சுபோச்சாம். மாடு முதலையிட்டப் பிடிபடாமல் ஓடிப்போயிற்றாம்'. என்று முடித்தது அந்தக் குட்டிச்சுட்டி. சரியம்மா, இதில இருந்து பிள்ளைக்கென்ன தெரியுது என்று கேட்டேன். பிள்ளை சொல்லியது, நித்திரை கொள்ளேக்க வாலை ஆட்டக்கூடாதெண்டுறதுதான்......!

இக்குழந்தை போலத்தான் சிலவேளைகளில், நம்மில் பல இளையவர்கள் செயற்படுகிறோம். விடுதலை என்பதற்கான புலம்பெயர்மண்ணின் செயற்பாடு, சனநாயக ரீதியான, அரசியல் செயற்பாடு என்பது தெளிவான உண்மை. ஆனால், சனநாயக ரீதியான அரசியல் செயற்பாட்டிற்கு, எமது அடுத்தகட்ட இளம்சமுதாயத்தினரை நெறிமுறையாக வழிப்படுத்துவது சிறிதளவும் கிடையாது. தமிழீழ விடுதலைக்கான அவசியம் எங்கிருந்து உருவானது என்ற தெளிவான விளக்கம் கொண்ட இளையவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். ஏதோ விடுதலை வேண்டும் என்ற ஒரு பெயரின் கீழ், புலம்பெயர் இளம் சமுதாயத்தினரின் மட்டற்ற பலம், எம் மூத்தவர்களால் திறமையாக வீணடிக்கப்படுவதை கண்கூடாகக் காணக்கூடியதாகவிருக்கிறது. இளையவர்களிற்கான அரசியல்திறனை வளர்த்தெடுத்தல், பொறுப்புக்களைச் சுமந்து செயற்படக்கூடியவர்களாக அவர்களை உருவாக்குதல், உண்மை, நேர்மை, வெளிப்படைத்தன்மை கொண்டவர்களாக அவர்கள் செயற்படவேண்டிய அவசியத்தை

குறித்துக்காட்டுதல், கலந்தாலோசித்து முடிவு-களை எடுக்கும் திறன், உடன்செயற்படும் மக்களை மதிக்கும் பாங்கு, விட்டுக்கொடுப்பு, தலைமையை மதித்தல், கட்டுமானங்களுக்குள் நின்று இயங்குதல் என்பன பற்றி, இப்போதுள்ள புலம்பெயர்மண்ணின் மூத்த இயங்குசக்தியினர் சிந்திக்கின்றார்களா என்றால் பதில் என்னவாக இருக்கும் என்று சொல்லித் தெரியவேண்டியதில்லை.

அடுத்து நான் மேற்கூறிய நாய்க்குணத்திற்கு வருவோம். எம்மில் அநேகமானோர், தமது கருத்துக்களுக்கு உடன்படும் கூட்டம் ஒன்றை எப்போதும் தம்மகத்தே வைத்திருப்பார்கள். அக்கூட்டம் சரி எது, பிழை எது, இது இலக்கை எட்டுமா, தடம்புரள்கையில் அடுத்த வழி என்ன, என்று எது பற்றியும் சிந்திக்காது. கருத்துக்களை அலசி ஆராயாது நேர், மறை முகங்களைப் பற்றிச் சிந்தியாது, ஆமாம் சாமி அரோகரா சாமி என்றபடி போய்க்கொண்டேயிருக்கும். முடிவுகள் தவறான பாதைக்கு மாறும்போது, அத்தவறுகளைச் சரிசெய்ய முயற்சிக்காது, தவறுகளை நியாயப்படுத்தும் முயற்சியில் முனைப்புக்காட்டும். இதுபோன்ற செயல்களினால், கால நேரம் வீணடிக்கப்படுவதோடு, மக்கள் மத்தியில், எவ்விதமான வெறுப்புணர்வுகளை அது உண்டாக்கும் என்பதையும் சிந்திக்க மறந்துவிடுகிறது. இது முற்றுமுழுதாகக் களையப்படவேண்டிய விடயம். அடுத்துவரும் இளைய சமுதாயத்தையும் இது தவறான வழிக்கு இட்டுச்செல்லும்.

நம்மிடையே மட்டுமல்லாது, உலகத்தமிழ்மக்களிடையே இன்றும் இருக்கும் அடுத்த நாய்க்குணம், தானும் படாது, தள்ளியும் படாதிருத்தல். தானும் செயற்படாது, செயற்படுபவன் மேலே அவதூறுகளை வீசியபடி இருக்கும் பலர் நம்முள் வாழ்கிறார்கள். விடுதலைக்காய் செயற்படுபவன் பற்றி, அவனது குடும்ப நிலை பற்றி, அவன் சந்திக்கும் இரும்புக்கரங்கள் பற்றி இந்த அவதூற்றுக்கூட்டம் சிந்திப்பதில்லை. எங்கேயோ, எப்போதோ நடந்த ஒரு சிறுதவறினை, பெரிதாக விமர்சிக்கும் இக்கூட்டம், தாம் செய்யும் பாரிய தவறுகள் பற்றிச்சிறிதும் சிந்திப்பதில்லை. இருபத்தைந்து வருடமாக விடுதலையை வளர்த்தோம் என்பதும், முப்பது வருடமாக முறிந்தோம் என்பதும் நி-யாயமானது தான். இன்றுள்ள அவசியம் பற்றிச்சிந்திப்பவனுக்கு, முன்னே போன முப்பது வருடத்தின் கதை வழிகாட்டியாக இருக்கலாம். அதற்காக , முன்னே போன முப்பது வருடத்திலும், அனைவரும் நெறிபிறழாது வாழ்ந்தோம் என்று நியாயப்படுத்த முடியாது. இன்றைய காலஓட்டத்திற்கேற்ப, இன்றைய அரசியல் அவசியத்திற்கேற்ப, பாரிய நிதிவளம் ஏதுமின்றிச் செயற்படுவதென்பது இலகுவானதல்ல. ஆனா-லும், முடிந்தவரை இன்றுள்ளவர்கள் முயற்சித்துக்கொண்டிருக்கிறார்கள். விமர்சனம் என்பது தேவையானதுதான். ஆனால் ஒரு குடையின் கீழ்நின்று விமர்சிப்பின் அது வரவேற்கத்தக்கது. இல்லையேல் வெளியில் நின்று விமர்சிப்பதை விடுத்து, அமைதியாக விடுதலையை நேசிப்பதே மேல். நம்மால் மேற்கொள்ளப்படும் தவறான விமர்சனங்கள், இனிவரும் இளையவர்களை மிகவும் பாதிக்கும். அவர்களை மனச்சோர்வடையச் செய்யும் என்பதை சொல்லித்தெரிய வேண்டியதில்லை.

என்றும் எப்போதும் தமிழின விடுதலை என்பது அவசியமானது. எவராலும் நிராகரிக்கப்படமுடியாதது . ஆனால், அப்பாதைக்கான கட்டுமானங்கள் இனி புலம்பெயர் மண்ணில்தான் அதிகம் இடப்படவேண்டும். அதற்கு நாம், இளையசமுதாயத்தை நெறிப்படுத்தவேண்டும். எமது பரம்பரை 'நற்குணங்களை' விடுத்து, சுயநலங்களை மறந்து, அறியாமையோடிருப்பவர்களை அணைத்துவழிகாட்டி, ஒரு சிறந்த தமிழ்ச் சமுதாயம் உருவாக அனைவரும் முயற்சிப்போம். அதன் பின் விடுதலை தானாக உருவாவதை எவராலும் தடுக்க முடியாது.


CENTURY TRAVELS & TOURS

Buy Tickets from 1€

AIR-BERLIN

- மிகக் குறைந்த விலையில் விமான டிக்கெட்டுகள்
- புகையிரத டிக்கெட்டுகள்.
- இலங்கையிலிருந்து வருவோர்க்கான காப்புறுதிகள்
- சுற்றுலாக்குரிய பயணச்சீட்டுகள் 560€விலிருந்து

Ram Nishanthan.Dip.TT.Mgt
IATA-UFTAA-Montreal Canada
Rheinische Strasse 29
44137 Dortmund
Fon: 0049 (0) 2315574319
Fon: 0049 (0) 2315896557
Fax: 0049 (0) 2315844665

info@centurytravels.de - www.centurytravels.de

# சில அரசியல் சிந்தனைச் சிதறல்கள்!

## வேட்டு 01:

வாக்காளர் தொகையின் அடிப்படையில் மக்கள் பிரதி நிதிகளின் எண்ணிக்கை என்பது இலங்கையின் தேர்தல் விதிமுறைகளுக்கு அமைவான ஒன்று. அதே போலக் குறித்த தேர்தல் நாளுக்கு முற்பட்ட ஆகக் குறைந்த காலப் பகுதியில் தேர்தல் தொகுதியில் வாக்காளர் குடி இருக்க வேண்டும் என்ற நிபந்தனையும் உள்ளது. அதன் அடிப்படையில் பிரதிநிதிகளின் எண்ணிக்கை கூடுவதும் குறைவதும் எற்கப்பட வேண்டிய ஒன்று.

வடபகுதியில் போரினால் ஏற்பட்ட குடிப் பெயர்வுகள் காரணமாக கணிசமான மக்கள் தெற்கிலும் பிற நாடுகளுக்கும் போய் விட்டதாலும் உயர் பாதுகாப்பு வலையங்கள் கண்ணி வெடிப் புரளிகள் காரணமாகவும் மக்களின் சொந்த இடங்களில் மீள் குடியேற்றம் முழுமை அடையவில்லை. மக்களின் மீள் குடியேற்றம் பற்றிய கவலை இருந்திருந்தால் தேர்தல்கள் நடத்தப்பட முன்னர் மீள் குடியேற்றமும் இயல்பு வாழ்க்கையும் ஏற்படுத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையை தமிழர் தலைமை வற்புறுத்தி இருக்க வேண்டும்.

ஆனால் தமிழர் முட்கம்பி முகாம்கள் அரச தடை மற்றும் வதை முகாம்கள் ஆயுதப் படையும் ஆயுத பாணிகளின் அடக்கு முறைக்குள்ளும் உள்ள மக்களை த.தே.கூ. தமிழர் படு கொலைகளில் செம்மணி முதல் முள்ளி வாய்க்கால் வரை கதா நாயகனாகச் செயற்பட்ட சரத் பொன்சேகாவுக்கு வாக்களிக்க வைத்தனர்.

தொடர்ந்து வந்த தேர்தல்களில் பங்கேற்ற பின்னர் தேர்தல் விதிமுறைகளுக்கு ஏற்ப பிரதிநிதிகளின் எண்ணிக்கையைச் சீர் செய்தால் அதைத் தவறு என வழக்குத் தொடரப் போகிறதாம் கூட்டமைப்பு. அப்படியே அவர்கள் பக்கம் நியாயம் இருந்தால் எந்த நீதிமன்றத்தில் நீதி கிடைக்கும்? வடக்கு கிழக்கு இணைப்பை நீதிமன்றம் நீக்கியபோதும் அதனை எதிர்த்து வழக்காட இவர்கள் நினைக்கவில்லை. வழக்கு விசாரணை மறுக்கப்பட்டு கால வரையறை இன்றி 20 வருடங்களுக்கு மேலாகச் சிறையில் அவதியுறும் அரசியல் மற்றும் சந்தேக கைதிகளுக்கு நீதி கேட்டு நீதிமன்றம் போக இவர்கள் நினைத்ததில்லை. இப்போது தங்களுக்கான பதவி பற்றிய தொகுதிப் பங்கீடு என்றவுடன் சுளகு படக்கு படக்கு!

## வேட்டு 02:

எழுத்து மூலமான யோசனை சமர்ப்பிக்காவிடில் கூட்டமைப்பு பேச்சில் ஈடுபடத் தயாரில்லை என்கிறார் கூட்டமைப்பின் பேச்சாளர் சுரேஷ் பிரேமச் சந்திரன். தமிழில் ஒரு பழமொழி, புண்ணுக்கு வலியா மருந்துக்கு வலியா என்பதுதான் அது. அரசு போகிற போக்கில் பாராளுமன்றக் குழுவை ஏற்படுத்தி மீண்டும் சுப்பற்றை கொல்லைக்கு உள்ளே கூட்டிப் போய் போக்குக் காட்டப் போகிறது. அதற்கெல்லாம் எழுத்து மூலம் யோசனை சமர்ப்பித்தா கூப்பிடப் போகிறது? நீங்களாக போய் ஆனா, ஆவன்னா எழுதிப் படிச்சால்தான் ஏதும் பிழைப்பு உண்டு இல்லா விட்டால் வெறும் கைநாட்டுதான். எதற்கும் கிடைச்சபதவியை விட்டுடாதீங்க!

## வேட்டு 03:

இலண்டனில் த.தே.கூ. பா.உ. திரு. சுமந்திரன் பேசியதைத் தவறாகப் புரிந்து தமது கண்டனக் கணைகளைத் தொடுத்த புலம்பெயர் தமிழ்தேசிய வாதிகளுக்கும் குறிப்பாக முன்னாள் பா.உ.கள் கஜேந்திரன் மற்றும் ஜெயானந்த மூர்த்திக்கும் நாம் விடுக்கும் பணிவான வேண்டுகோள். அரசியல் அதுவும் சர்வதேச அரசியல் ரொம்பச் சிக்கலானதும் திறமைமிக்க ஒரு சிலரால் மட்டுமே விளங்கிக் கொள்ளக் கூடியதுமான விடையம். திரு.சுமந்திரன் முன்னர் பேசியதைத் தவறாக நீங்கள் புரிந்து கொண்டிருக்கலாம். ஆனால் இப்போது தரப்பட்ட விளக்கம் மிகத் தெளிவாக இருக்கிறது போல் தெரிகிறது. சந்தேகம் இருந்தால் எதற்கும் கோத்தபாயா, ஜீ.எல்.பீரிஸ். ரணில் போன்றோரின் பேச்சுகளையும் கேட்டு அவையும் விளங்குகிறதா எனச்சரி பார்த்துக் கொள்ளுங்கள். இதுதான் டிப்புளோமற்றிக் என்பது.

## வேட்டு 04:

த.தே.கூ முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் சிவாஜிலிங்கம் தமிழ் தேசியம் பேசியதால் கூட்டமைப்பில் இருந்து வெளியேற்றப்பட்டவர். ஜனாதிபதித் தேர்தலில் தமிழனாகப் போட்டியிட்டு கூட்டமைப்பின் கோபத்துக்கும் எதிர்ப்புக்கும் முகம் கொடுத்தவர். நாட்டுக்கு அதிபதியாக நினைத்து இப்போ வல்வை நகரசபைக்கு முதல்வராக விரும்பி தமிழரசுக் கட்சியின் செயலாளர் நாயகம் மாவை சேனாதிராசாவின் தயவில் ஒரே ஒரு வருடம் பதவியில் இருக்க கோரிக்கை விடப்பட்டுள்ளது கண்டோம். தமிழ் தேசியத்தின் பால் உள்ள பற்றின் காரணமாக அவருக்கு அப்பதவியை ஒரு வருடத்துக்கு மட்டும் கொடுத்துக் கூட்டமைப்பின் ஒற்றுமையை காப்பாற்ற மானமுள்ள தமிழினத்தின் சார்பாகக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறோம்.

## திரியாயில் தமிழர் நிலம் 3000 ஏக்கர் புத்த விகாரைக்குத் தானம்!



இதற்குத் தீர்வாக த.தே.கூ. தலைவர் இரா. சம்பந்தன் மகிந்தருக்குக் கடிதம் எழுதி உள்ளாராம். இவர் கடிதம் எழுதினால் அவர் உடனே நிறுத்தி விடுவார் என மக்களை நம்பச் செய்யவா இந்த நாடகம்? இப்படித்தான் முன்னாள் தமிழக முதல்வரும் கடிதங்கள் எழுதியே காலத்தைப் போக்கி தமிழ் மக்களைச் சாகடித்தார். சர்வதேச சமூகம் இருப்பதும் இவர்கள் மீது அடிக்கடி அழுத்தம் கொடுப்பதாகத் தமிழ் மக்களுக்கு இவர்கள் அறிக்கை விடுவது எம்மை ஏமாற்றத்தானா என கேட்கத் தூண்டுகிறது.

மகிந்தருடன் நேரில் பேசியே எதுவும் கிடைப்பதில்லை என்று கூறும் இவர்களுக்கு எதற்காக இந்தக் காதல் கடிதம்? இதே கடிதத்தை ஐ.நாவுக்கோ ஐரோப்பிய ஒன்றியத்துக்கோ அல்லது அடுத்த வீட்டுத் தாடி வாலாவுக்கோ எழுதினால் தாகத்துக்குத் தண்ணியாவது கிடைக்குமே? எப்படியோ தமிழர் தேசியம் இப்படிக் குப்பைத் தொட்டியில் போகிற கடிதமாக இருப்பதே எமது மனதுக்கு ஆறுதலாக இருக்கட்டும்.

தானமாகப் போகும் தமிழர் நிலத்தின் பரப்பளவு மட்டும் ரொம்பக் கறாராக 3060 ஏக்கர் 2 றூட் 15 பேர்ச் என மிகச் சிரத்தையோடு இந்தச் செய்தி கூறுகிறது. தமிழருக்காகப் போராடும் தேசியக் கூட்டமைப்பு ஆத்திலை போட்டாலும் அளந்து போடும் அளவுக்கு அக்கறையோடு செயற்படுகிறது என அதன் தொண்டர் புளகாங்கிதம் அடையட்டும்.

# ஐரோப்பிய ஒன்றியம் தமிழீழ விடுதலைப் புலிகள் மீதான தடையைத் தொடருமா?



தமிழீழ விடுதலைப் புலிகள் மீதான தடையை நீக்கக் கோரி ஐரோப்பிய நீதி மன்றத்தில் வழக்குத் தாக்கலாகி உள்ளது. இந்த வழக்கை ஆம்ஸ்ரடாம் நகரைத் தளமாகக் கொண்டுள்ள சட்டவாளர் நிறுவனம் ஒன்றின் சட்டவாளர் விக்ரர் கொப்பே என்பவர் லக்சம்பேர்க் நகரின் தமிழீழ விடுதலைப் புலிகளின் சார்பாக தாக்கல் செய்துள்ளார்.

ஐரோப்பிய ஒன்றியம் தடை நீடித்தலை செப்டெம்பர் மாதத்தில் இருந்து அமுலாக்க தீர்மானித்து விட்டது. இதே சமயம் ஐரோப்பிய ஒன்றியம் இந்த வழக்கு பற்றிய தனது நிலைப்பாட்டை எழுத்து மூலம் நீதிமன்றத்துக்குத் தெரியப்படுத்த சட்டம் கட்டாயப் படுத்துகிறது. செப்டெம்பர் மாதத்தின் 3வது வாரத்தில் இந்த எழுத்து மூலமான ஒன்றியத்தின் நிலைப்பாடு தெரியவரும் என எதிர்பார்க்கப்படுகிறது.






# தமிழ் சினிமாவின் 'இருவர்'

வி. சபேசன் (ஜேர்மனி)

கடந்த ஜுலை 25 அன்று நடிகர் ரவிச்சந்திரன் அவர்கள் காலமாகி விட்டார். பல வெற்றிப் படங்களில் நடித்து ரவிச்சந்திரனின் மறைவு பல நினைவலைகளை எனக்குள் உருவாக்கியது. குறிப்பாக எம்ஜிஆர் சிவாஜிக்கு அடுத்து தமிழ்திரைப்படத்துறையில் ஜொலிக்கப் போகின்ற இருவரில் ஒருவராக கணிக்கப்பட்டவர் ரவிச்சந்திரன் என்கின்ற செய்தி 'தமிழ்சினிமாவின் இருவர்' பற்றி எழுதத் தூண்டி விட்டது.

தமிழ் சினிமாவில் உச்ச நட்சத்திரங்களாக இருவர் எப்பொழுதுமே இருப்பார்கள். இந்த இருவரில் யார் முதன்மையானவர்கள் என்பதில் எப்போதும் போட்டி இருந்து கொண்டிருக்கும். இந்த இரண்டு உச்ச நடிகர்களுக்கும் மற்றைய கதாநாயக நடிகர்களுக்கும் சம்பளம், படங்களின் வசூல் போன்ற விடயங்களில் மிகப் பெரிய தூர இடைவெளி இருக்கும்.

தற்பொழுது அப்படி ரஜினி - கமல் இருக்கின்றார்கள். இவர்களுக்குப் பின் அடுத்த இரண்டு உச்ச நட்சத்திரங்களாக விஜய் - அஜித் உருவாகுவார்கள் என்றும் இல்லை, ஏற்கனவே அப்படி அவர்கள் உருவாகிவிட்டார்கள் என்றும் திரையுலகில் பேசப்படுகிறது.

தமிழ் சினிமாவின் தொடக்க காலத்தில் இரு உச்ச நடிகர்களாக தியாகராஜ பாகவதரும் பியூ சின்னப்பாவும் விளங்கினார்கள். இவர்கள் அன்றைய காலங்களில் செய்த சாதனைகள் இன்று வரை முறியடிக்கப்படவில்லை இனிமேலும் முறியடிக்க முடியாது.

உண்மையில் இந்த இருவரும் நடித்த படங்கள் வெகு குறைவே. தியாகராஜ பாகவதர் சுமார் 15 திரைப்படங்களிலும், பியூ சின்னப்பா சுமார் 25 படங்களிலும் நடித்திருக்கிறார்கள். ஆனால் படங்கள் வருடக் கணக்கில் ஓடி அவர்களை தமிழ் சினிமாவின் உச்ச நட்சத்திரங்களாக மாற்றின.

இவர்கள் இருவரும் நடித்த படங்கள் வருடக் கணக்கில் ஓடின. தியாகராஜ பாகவதரி-ன் நடிப்பில் 1944இல் வெளியான 'ஹரிதாஸ்' இரண்டு ஆண்டுகளையும் தாண்டி ஓடியது. 1944இல் தீபாவளி அன்று வெளியான இந்தத் திரைப்படம் 1945இன் தீபாவளியையும் கண்டு, 1946இன் தீபாவளித் தினத்திலும் ஓடி மூன்று தீபாவளிகளைக் கண்ட ஒரே ஒரு திரைப்படம் என்று பெருமையைப் பெற்றுக் கொண்டது.

பியூ சின்னப்பா நடித்த 'உத்தம புத்திரன்' தமிழ் சினிமாவின் முதலாவது இரட்டையர் வேடங்களைக் கொண்ட திரைப்படம் என்று சொல்கிறார்கள். இதற்கு முன்பு ஒரே நடிகர் இரண்டு வேடங்களில் நடித்தது இல்லை. இதைப் பார்ப்பதற்கே அப்பொழுது மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். இந்தப் படம் பெரும் வெற்றி பெற்றது. (இந்தத் திரைப்படம் பின்பு நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் நடிப்பில் மீண்டும் உருவாக்கப்பட்டு அதுவும் வெற்றி கண்டது).

அன்றிலிருந்து இன்றுவரை இரு உச்ச நடிகர்களில் ஒருவர் மிகவும் நடிப்புத் திறமை மிக்கவராக இருப்பார். பல வேடங்களில் நடித்தும் பல சோதனை முயற்சிகளை மேற்கொண்டும் நடிப்புத் துறைக்கு பெரும் பங்களிப்பை வழங்குவார். ஆனால் அவர் இரண்டாவது இடத்தில்தான் இருப்பார்.

மற்றவர் கஸ்ரப்படமால் குதிரையில் வந்து பாடியோ, கையைக் காலை வீசி சமூக சிந்தனைகளை பேசியோ, ஸ்டைல் காட்டியோ மக்கள் மனதைக் கவர்ந்து முதலாம் இடத்தைப் பிடித்து விடுவார்.

அப்பொழுதும் நடிப்பு, பாடல், சண்டைப் பயிற்சி என்று பல்திறனைக் கொண்டிருந்த பியூ சின்னப்பா இரண்டாவது இடத்தில்தான் இருந்தார். தியாகராஜ பாகவதர் குதிரையில் வந்தபடி 'வாழ்விலோர் திருநாள்' என்று பாடியே அனைவரின் மனதையும் கவர்ந்து முதலாம் இடத்தைத் தட்டிச் சென்றார்.

ஆயினும் இவர்களுக்கு ஏற்பட்ட சில பிரச்சனைகள் இவர்களைத் தொடர்ந்து உச்ச நடிகர்களாக நீடிக்க முடியாமல் செய்தன. தியாகராஜ பாகவதர் ஒரு கொலை வழக்கில் சிக்கி சில ஆண்டுகள் சிறை செல்ல வேண்டி வந்தன. பியூ சின்னப்பா தன்னுடைய குடிப்பழக்கத்தால் பல சிக்கல்களில் சிக்கி வாய்ப்புக்களைக் குறைத்துக் கொண்டார். இந்த நேரத்தில் இவர்களின் படங்களும் தோல்வி அடைய ஆரம்பித்தன.

இப்படியான நேரத்தில்தான் எம்ஜிஆர், சிவாஜி கணேசனின் வருகை அமைந்தது. காலம் இவர்களுக்கு சரியான நேரத்தை வகுத்துக் கொடுத்தது.
வருத்தப்படும் வகையில் தியாராஜ பாகவதரும், பியூ சின்னப்பாவும் தமது இளவயதிலேயே காலமாகி விட்டார்கள். தியாகராஜ பாகவதர் 1959இல் தன்னுடைய ஐம்பதாவது வயதில் மரணமடைந்தார். பியூ சின்னப்பாவோ இன்னும் இளவயதில், தன்னுடைய 35ஆவது வயதிலேயே 1951இல் காலமாகி விட்டார்

சிலவேளைகளில் இவர்கள் இருவரும் உயிரோடு இருந்திருந்தால் எம்ஜிஆர் - சிவாஜி இருவருக்கும் கடும் போட்டியைக் கொடுத்திருப்பார்கள். இருவர்கள் நால்வர்களாக இருந்திருக்கின்ற நிலைமையும் ஏற்பட்டிருக்கலாம்.

1950களில் சிவாஜியும் எம்ஜிஆரும் வெற்றிப் படங்களைக் கொடுத்தபடி வேகமாக முன்னேறி உச்ச நடிகர்கள் என்ற இடத்தைத் தொட்டார்கள். இதன் பிறகு நடந்தவைகள் நாம் அறிந்தவைகள்தான்.

சிவாஜி தன்னுடைய நடிப்புத் திறமையால் உலகின் மிகச் சிறந்த நடிகர்களில் ஒருவர் என்று புகழைப் பெற்றார். எம்ஜிஆர். 'ஏழைத் தோழன்' வேடங்களை ஏற்று மக்களிடம் பெரும் புகழையும் அன்பையும் பெற்று பின்பு முதலமைச்சராகவும் ஆனார்.

வழமை போன்று நடிப்புத் திறமை வாய்ந்த சிவாஜி இரண்டாம் இடத்திலும், கையை வீசி பாட்டுப் பாடுவதாக நடித்துக் கொண்டே எம்ஜிஆர் முதலாம் இடத்திலும் அமர்ந்து கொண்டார்கள்.

எம்ஜிஆர் - சிவாஜி என்கின்ற 'இருவர்களுக்கு' பின்பு ரஜினி - கமல் அடுத்த 'இருவர்களாக'ஆனதுதான் பலருக்குத் தெரியும். இடையில் வேறு இருவர்கள் அப்படி எதிர்பார்க்கப்பட்டார்கள் என்பது பலருக்கு தெரிந்திருக்காது.

1960 களில் பல புதிய நடிகர்கள் அறிமுகம் ஆனார்கள். அந்த நடிகர்களில் இருவர் பலரின் கவனத்தை ஈர்த்தார்கள். 1964இல் ரவிச்சந்திரன் 'காதலிக்க நேரமில்லை' படத்தின் மூலம் அறிமுகமானார். 1965இல் ஜெய்சங்கர் 'இரவும் பகலும்' என்ற படத்தின் மூலம் அறிமுகமானார்.

இரண்டு படங்களும் பெரும் வெற்றியைப் பெற்று 200 நாட்களைத் தாண்டி ஓடியது. தொடர்ந்து அவர்கள் நடித்த பல படங்களும் வெற்றி பெற்றன.

ஜெய்சங்கர் பல விதமான பாத்திரங்களை ஏற்று நடித்தார். பல படங்களில் துப்பறியும் வேடங்களை ஏற்று நடித்தார். 'தென்னகத்து ஜேம்ஸ்பாண்ட்' என்று புகழப்பட்டார். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அவருடைய படங்கள் வெளியாகின. இதனால் அவர் 'வெள்ளிக் கிழமை நாயகன்' என்றும் அழைக்கப்பட்டார்.

ரவிச்சந்திரன் எம்ஜிஆர் பாணியைப் பின்பற்றினார். அவரை சின்ன வாத்தியார் என்று அவருடைய ரசிகர்கள் அழைக்கத் தொடங்கினார்கள்.

இப்படி இருவரும் வெற்றி நாயகர்களாக உலா வரத் தொடங்கினார்கள். இருவருக்கும் பல ரசிகர் மன்றங்கள் உருவாகின. அவைகளுக்குள் மோதல்கள் நடந்தன. எம்ஜிஆர் - சிவாஜி என்கின்ற இருவர்களுக்குப் பின்பு ஜெய்சங்கர் - ரவிச்சந்திரன் என்கின்ற இருவருமே அந்த இடத்திற்கு வருவார்கள் என்கின்ற எதிர்பார்ப்பு இருந்தது.

ஆனால் பல காரணங்களால் அவைகள் நடைபெறவில்லை. இதிலே அரசியற் காரணங்களும் அடங்கும். அவைகளைப் பற்றி பின்பு ஒரு முறை பார்க்கலாம். ஆனால் முக்கிய காரணம் சிவாஜி – எம்ஜிஆர் என்கின்ற உச்ச நடிகர்கள் களத்தில் இருக்கின்ற காலத்திலேயே ஜெய்சங்கரும் ரவிச்சந்திரனும் களத்தில் இருந்ததுதான். முன்னைய இருவரையும் தாண்டி பின்னைய இருவராலும் செல்ல முடியவில்லை.

திறமை என்பதைத் தாண்டி காலமும் வழி விட வேண்டும். திறமையோடும் சரியான காலத்திலும் சினிமாவுக்குள் நுழைந்த ரஜினி கமலுக்கு அடுத்த இருவர்களாகின்ற வாய்ப்பு கிடைத்தது.

எம்ஜிஆர் முதலமைச்சராகி சினிமாவில் இருந்து விலகியிருந்தார். அதன்மூலம் 'இருவர்கள்' என்பது இல்லாமல் போயிருந்தது. சிவாஜிக்கும் வயதாகிக் கொண்டிருந்தது. இந்த நேரத்தில் கமலும் ரஜினியும் அதிரடியாக வந்து மக்களை கவர்ந்தார்கள்.

இன்றைக்கு இருவரும் உச்ச நடிகர்களாக திகழ்கின்றார்கள்.

இதற்கிடையில் 80களில் வந்த பிரபு, கார்த்திக்கின் மீது ஊடகங்களின் கவனம் திரும்பியது. ரஜினி கமலுக்கு அடுத்தபடியாக அவர்களே அடுத்த இருவர்களாக வருவார்கள் என்று சில ஊடகங்கள் எழுதின. அது உண்மை என்பது போல பிரபு கார்த்திக் இருவரும் பல வெற்றிப் படங்களையும் கொடுத்தார்கள்.

ஆனால் ஏற்கனவே சொன்னது போன்று ரஜினி – கமல் களத்தில் இருக்கின்ற பொழுதே அவர்களை மீறி பிரபு, கார்த்திக்கால் உச்சத்திற்கு செல்ல முடியவில்லை.

இப்பொழுது அஜித் - விஜய் என்று சொல்கிறார்கள். இது சரியா, அல்லது சிம்புவுக்கும் தனுசுக்கும் அந்த வாய்ப்பைக் காலம் வழங்குமா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

E.S.T.M Jewellery
"ஸ்ரீ விராட விஷ்வ குலபிரமனே நமக"
NEW OPENING
நம்பிக்கை, நாணயம், உத்தரவாதம்!
E.S.T
உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் நவீன உயர்தர டிசைன்களில் நகைகளும், திருமண ஆபரணங்கள், ஓடர்நகைகள், திருத்த வேலைகள் யாவும் செய்து கொடுக்கப்படும்.
சிங்கப்பூர் நகைகள் (916) மாற்றிக் கொள்ளப்படும்.
தாலிக்குப் பொன்னுருக்குதல், காது, மூக்குக்குத்துதல் போன்ற நல்ல காரியங்கள் செய்து கொடுக்கப்படும்.
உரிமையாளர்: சின்னத்துரை தயாகரன்
Rheinische Str. 73
44137 Dortmund
Germany
Tel: 0231 18 99 023
Mobile: 0163 36 42 642
E-Mail: estm-jewellery@hotmail.de



# பாவம் இவனும் ஒரு அகதியா?

இலங்கையில் அகதியாக நாடு விட்டுப் போவது தமிழர்தான் என்பது பரவலான உண்மை. ஆனால் ஊடகத் துறையிலுள்ள சில சிங்களவரும் அகதியாகி வெளி நாடுகளில் தஞ்சம் புகுந்துள்ளனர். இது ஒரு புது ரகம்.

தமிழகத்தில் ராமேசுவர நீதி மன்றத்தில் 25 வயது மதிக்கத் தக்க ஒரு சிங்கள இளைஞன் கைகளில் விலங்கிடப்பட்ட நிலையில் காணப்பட்டார். கூட இருந்த காவல் துறையினர் அவரை மதுரை சிறையிலிருந்து அவருக்கு விளக்க மறியல் கால நீடிப்புச் செய்ய கொண்டு வந்துள்ளதாகத் தெரிவித்தனர்.

இவர் சிங்களவர் தமிழ் பேசத் தெரியாது கடவுச் சீட்டில்லாத காரணத்தால் கைது செய்துள்ளோம் பிணை எடுப்பார் யாரும் இல்லை அதனால் சிறைக் கால நீடிப்பு திரும்பத் திரும்ப எடுத்து வருகிறோம். அவரது நிலை பாவமாக இருக்கிறது எனக் காவலர் சொன்னார்.

தட்டுத் தடுமாறி அவரிடம் கேட்டபோது சிங்களமும் ஆங்கிலமுமாக அவர் சொன்னார். அம்பாந் தோட்டையைச் சேர்ந்தவராம். கொழும்பில் எலக்ரோனிக் என்ஜினியரிங் படித்த போது. ராஜபக்ஷ வுக்கு எதிராக தேர்தலில் சரத் பொன்சேகாவுக்கு ஆதரவாகச் செயற்பட்டவராம்.

தேர்தலின் பின்னர் அவர்போல் ராஜபக்ஷவுக்கு எதிராகச் செயற்பட்டவர்கள் சிறை சித்திரவதை காணாமல் செய்தல் மூலம் பழிவாங்கப் படுகின்றனராம். தன்னையும் போலீஸ் தேடவே பெற்றோர் எப்படியும் நாட்டைவிட்டுப் போகச் சொன்னதால் தானும் மன்னார் வந்து படகு மூலம் தனுஸ்கோடி வந்ததாகச் சொன்னார். தன்னைத் திரும்ப அனுப்பினால் தனது உயிருக்குப் பாதுகாப்பு இல்லை அதனால் அனுப்ப வேண்டாம் எனவும் கூறினார்.

அவர் அங்கே ஒரு கொலை செய்து போட்டுத் தப்பி வந்துவிட்டார் எனவும் தமிழ் நாட்டில் காதலி இருப்பதாகவும் தகவல் மற்றப்படி கடவுச் சீட்டு இல்லாததால் அவரை கைது செய்ததாகச் கியூ பிரான்ச் சொல்கிறது. கொலை செய்ததும் காதலி இருப்பதும் தெரிந்து சொல்லும் கியூ பிரான்ச் அவரை காதலித்த பெண்ணைக் கூடவா விசாரிக்க முடியவில்லை?

பாவம் யார் பெத்த பிள்ளையோ !

# நோர்வேயில் நடந்த தாக்குதல்!



முதலாவது கார் குண்டு வெடிப்பு நிகழ்ந்த பகுதி. எட்டுப் பேர் உயிரிழக்கவும் 10 பேர் வரை கடும் காயங்கள் படவும் காரணமானது.

ஜுலை 22ந் திகதி நோர்வே தலைநகர் ஒஸ்லோவில் பிரதம மந்திரியின் அலுவகத்துக்கு அருகாமையில் ஒரு பாரிய குண்டு வெடித்தது. ஐரோப்பாவில் அதுவும் உலக நாடுகள் பலவற்றின் போர்களை நிறுத்த அமைதிப் பேச்சுகளில் முக்கிய பங்காற்றி வரும் பாரம்பரியத்தைக் கொண்டுள்ள நாட்டில் இக்குண்டு வெடிப்பு சிறிதும் எதிர்பார்காத ஒன்று.

இரண்டாவது நிகழ்வு அவர் நடத்திய கொலை வெறித் துப்பாக்கிச் சூடு. ஊரோயா என்ற சிறு தீவில் ஆளும் தொழிற் கட்சியின் இளைஞர் அமைப்பின் அரசியல் கருத்தாய்வு முகாமுக்குச் சென்றிருந்தவர்கள் மீது. சுமார் 90 நிமிடங்கள் கேட்க யாரும் இல்லாத சூழலில் தன்னிச்சையாக இயந்திரத் துப்பாக்கியின் ரவைகளை மழையாகப் பொழிந்து தள்ளியவர். அதில் 80 வரையானோர் உயிரழந்தனர். தனித் தீவு என்பதால் காவல் துறை வந்து சேர தாமதமானது. காவல் துறையின் குறைபாடுகளை அரசு உடனடியாகத் தீர்க்கும் முகமாக மேலதிக ஆட்களும் கருவிகளும் சேர்த்துக் கொள்ள முடிவு செய்துள்ளது.

இத்தாக்குதலுக்கு காரணம் அண்மைக் காலங்களாக அந்நாட்டில் எழுந்துள்ள இஸ்லாமிய தீவிரவாதம் பற்றிய அதன் அணுகு முறை இஸ்லாமியரின் கோபத்துக்கு ஆளாகி அதனால் இப்படியாக நிகழும் என எதிர்பார்த்தவர்களுக்கு ஏமாற்றம்தான். ஏனென்றால் அதை இஸ்லாமியத் தீவிரவாதிகள் நடத்தவில்லை.

ஆப்கான் போரில் நோர்வேயின் வகிபாகத்தை எதிர்த்து அவர்களின் கோபமும் எச்சரிக்கையும் இருந்ததால் அது ஆப்கான் தீவிரவாதிகளின் செயலாக இருக்க வேண்டும் எனக் கணக்குப் போட்டவர்களின் கணக்கும் பிழைத்து விட்டது. ஏனென்றால் அவர்களும் இதைச் செய்வில்லை. செய்தது நோர்வேயில் பிறந்த நோர்வேயரான 32 வயதான அன்டர்ஸ் பேரிங் பிரவிக் என்ற நோர்வேயின் குடிமகனே.

அவர் தனது தாக்குதல்களுக்கான காரணங்களைப் பல பக்க அறிக்கையாக இணையத்தளத்தில் பதிவேற்றம் செய்த பின்பே இவற்றைச் செய்துள்ளார். அவருக்குத் தேவையான ஆயுதங்களை காவல்துறையின் சீருடைகளையும் இணையத்தளத்தில் வருவித்துள்ளார். பல வருடங்கள் பணம் சேமித்து ஒரு பண்ணை நிலத்தையும் வாங்கி பெருமளவு உரமாகப் பயன்படுத்தும் இரசாயன உரமும் வாங்கித் தானே குண்டு தயாரித்துள்ளார்.

இவனை இத்தகைய மன நிலைக்குத் தள்ளியது தனது இணையத்தள புளொக்கில் லயன் றாட் என்ற பெயரில் தான் எழுதிய கருத்துக்களே என்று போல் றே என்ற பிரித்தானியர் கூறுகிறார். அவனைப் பற்றி கிறிஸ்தவக் கடும் போக்காளர் கிறிஸ்தவப் பயங்கரவாதி கிறிஸ்தவ பாசிசவாதி என நோர்வே காவல் துறை கூறுகிறது.

ஒரே நாளில் ஒரே குண்டுத் தாக்குதலும் ஒரே துப்பாக்கித் தாக்குதலும் நடத்திய நோர்வேயருக்கு இப்பெருமை கிடைத்துள்ளது.

ஆனால் இத்தகைய சான்றிதழ்களைப் பெறுவதற்கு தமிழீழ வீடுதலைப் புலிகள் இயக்கம் 30 வருடங்களாகப் போராடி இதே நோர்வே நாட்டின் அனுசரனையுடன் உலக நாட்டின் தலைநகரங்களில் 6 சுற்றுகள் இலங்கை அரசுடன் அமைதிப் பேச்சுக்களை நடத்திய கடின உழைப்பின் பயனாகவே பெற முடிந்தது என்பதை நாம் உலகுக்குச் சொல்லிக் காட்ட வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

இஸ்லாமியத் தீவிரவாதம் எனக் கூறி அந்நாடுகளில் போர்களையும் குழப்பங்களையும் அழிவுகளையும் செய்து வரும் மேற்குலகம் இனிமேல் கிறிஸ்தவப் பயங்கரவாதம் பற்றிக்கவனிக்க வேண்டிய நிலைக்கு வந்து விட்டது. யேர்மன் சுவிஸ் நாடுகளில் மொட்டைத் தலைகள் என்ற நாசி அல்லது வலது சாரிகளின் செல்வாக்கு பெருகிவருகிறது. ஆயினும் புலிப் பயங்கரவாதம்தான் இப்போது இவர்கள் கண்ணுக்குப் பெரிசாகத் தெரிகிறது.

என்னதான் இருப்பினும் உயிரிழப்பாலும் காயங்களாலும் துயரப்படும் அனைத்து மக்களுக்கும் அகரம் தனது அனுதாபத்தை தெரிவிப்பதோடு அவர்களின் துயரிலும் பங்கேற்கிறது.


CITY CAR CENTER

S. Nimal
Münster Str. 61
59065 Hamm
Germany

Tel.: 02381 6 04 83
Fax: 02381 48 89 05

தங்களது வாகனங்களை விற்பதற்கோ அல்லது மிகக் குறைந்த விலையில் வாகனங்களைப் பெற்றுக்கொள்வதற்கோ எம்மை நாடுங்கள்.



# கண்கெட்ட பின் சந்திரிக்கா அம்மையாரின் சூரிய நமஸ்காரம்!!!

முன்னாள் இலங்கையின் நட்சத்திர ஜனாதிபதி நாயகி சந்திரிகா குமாரதுங்க பண்டார நாயக்காவுக்கு குமட்டல் வியாதி எடுத்திருக்கிறது. வாந்தி எடுப்பதற்கும் அவருக்கு வாய்ப்பான இடமாக மறைந்த ஒரு தமிழ் நீதிபதியின் நினைவு அரங்கம்தான் கிடைத்தது. ஒரு வேளை தமிழன் என்றால் சிங்கள சாதிக்கு நிறைய விடயங்கள் மனதில் கிளம்பி விடுகிறதோ என நினைக்கத் தோன்றுகிறது.

இராமாயணத்தில் யாரோ இராவணனைக் கேட்டார்களாம் உனக்குத்தான் விரும்பிய வடிவம் எடுக்க முடியுமே நீ ஏன் ராமன் வடிவில் போய் சீதையுடன் அசோக வனத்தில் டுயட் பாடி காதல் பண்ணக் கூடாது என்று ? அதற்கு தான் ராமன் வடிவம் எடுத்ததும் வேறு பெண் மீது ஆசை வர மறுக்கிறது என்று இராவணன் சொன்னானாம். கம்ப தாசர்களுக்கு ராம நாமத்தில் அப்படி ஒரு அதீத கற்பனை. சந்திரிகாவின் நிலையைப் பார்க்கும்போதும் தமிழன் இருந்தாலும் இறந்தாலும் சிங்களத்துக்குச் சிம்ம சொர்ப்பனமோ என்னமோ?
சந்திரிகா தமது உரையில் முடிவாக எழுப்பிய கேள்வியைப் பாருங்கள், எங்களால் முயற்சி செய்து பழைய காலத்தை பின்னே தள்ளி விட்டு வருங்காலத்தை நோக்கி வானத்து நட்சத்திரங்களை நோக்கி ராஜநடை போட முடியாதா? என்கிறார்.

இவர் எங்களால் என்று கூறியது சிங்களத்தையும் உள்ளடக்கிய இலங்கையர் என்று யாராவது நினைத்தால் அவர்களை விட்ட ஏமாளிகள் இருக்க முடியாது. இது தமிழரின் மரணவீட்டில் எழுதிய தமிழருக்கான மரணசாசனம் என்பதே உண்மை. இதனை உணர முடியாத தமிழன் இன்னும் உயிரோடு இருப்பின் அவனை அலரி மாளிகையின் அழுக்கில் வாழும் கரப்பொத்தான் பூச்சி என்றுதான் கூற வேண்டும்.

நீதிபதி பாலகிஸ்ணர் நினைவுரையில் பேச எடுத்த தலைப்பு – பொருண்மிய அபிவிருத்தி, சமூகங்களின் உள்ளடக்கமும் அமைதியும்.

அபிவிருத்தி பற்றிச் சோபேர்ண் கலா சாலையில் படித்த விளக்கங்களோடு நல்லாட்சியும் உள்ளடங்கும் என கூறியதில் அம்மாவுக்கு நல்லாய் அறளை பேர்ந்து விட்டது என நினைக்கத் தோன்றுகிறது. ஆங்கில உரையைப் படித்தால் அடிக்கடி உங்களை நீங்களே கிள்ளிப் பார்த்துக் கொள்ளும் அளவுக்கு மெய்மறந்து விடுவீர்கள்.

சமூகங்களின் உள்ளடக்கம் அல்லது உள்ளடக்க சமூகம் என்பது எல்லாக் குடிமக்களும் சமமான சந்தர்ப்பங்களும் தேசத்தின் வளர்ச்சியில் முழுமையான பங்களிப்புச் செய்யும் கட்டாயமும் உணர்ந்தவர்களாக இருப்பர் என்கிறார். இதிலே சிறுபான்மை பெரும்பான்மை இனவிகிதாசாரம் மொழி மத வேறுபாடுகள் எதையுமே காணவில்லையே. செம்மணியில் பள்ளிச் சிறுமி கிருஷாந்தி முதல் நாவாலி பேதுரு தேவாலயம் நாகர் கோயில் பள்ளிக் கூடம் சூரியக் கதிர் தீச்சுவாலை என எத்தனை பெரிய கொடூரங்களைச் செய்த சமாதான தேவதை சந்திரிகாவா இப்படி மாறியது?

இதையும் படியுங்கள்,“ இதற்கு ஒருவருக்கு ஜனநாயக அரசியல் கட்டமைப்பில் தனியாரின் சுதந்திரங்களும் எல்லாக் குடிமக்களினதும் சுயாதீனமான முழுமையான பங்களிப்பும் தேவையாகிறது. இவை இல்லாத நிலையில் ஆட்சி விரைவில் சர்வாதிகாரத்துக்கும் சட்டமின்மைக்கும் வலிமை மிக்க ஒரு சிலரது தேவைகளுக்காகவுமே இருக்கும்.”

இதோ இன்னோரு பொன்மொழி, அமைதி, எல்லாரிடம் இருந்தும் பணிவும் தியாகமும்

கேட்கிறது. அதற்கு பலமான தீர்க்கமான தூர நோக்குடைய அரசியல் தலைமை அவசியம்.

இவை எல்லாம் சனல் 4 இலங்கையின் கொ-லைக் களங்களை விடவும் கொடூரமாகத் தெரியவில்லையா?

இதோ தமிழருக்கு அல்வா தருகிறார்- இலங்கையில் மொழிக் கொள்கை அதுவரை அமைதியான தமிழ் சமூகத்தை சமவாய்ப்புக் கோரிக்கை காரணமாக துருவ நிலைக்குத் தள்ளி விட்டது.

என் வாழ்நாள் உள்ள வரை எனது 28 வயது மகன் தொலை பேசியில் அழுதபடியே நான் ஒரு சிங்களவன் என்றும் இலங்கையன் என்றும் கூறிக் கொள்ள வெட்கப்படுகிறேன் என்று என்னிடம் சொன்னதை நினைத்தபடியே இருப்பேன்.

எனது மகளும் அவனைத் தொடர்ந்து சொன்னாள் எங்கள் தேசத்தவர் இப்படியான கொடும் செயல்களைச் செய்வார்களா என்றாள்.

எனது மகனும் மகளும் மற்றவர்களை நினைத்து அக்கறை கொள்வதைப் பார்த்து அவர்களின் தந்தை தாய் விரும்புவது போல் பெரியவர்களாக வந்து விட்டதைக் கண்டு நான் பெருமைப் படுகிறேன். அட அப்படியா? யாரும் சொல்லவே இல்லை!

தமிழ் மக்களின் நம்பிக்கையை வேறு எந்தச் சிங்கள அரசியல்வாதியும் பெற்றிராத அளவுக்கு பெற்றவளும் நீங்கள் அல்லவோ, ஓரே நாளில் 5 இலட்சம் தமிழ் மக்களை புலிகளின் பின்னால் ஓட வைத்தவளும் நீங்கள் தானே! அமைதிப் பேச்சைக் குழப்பி ரணிலை தூக்கியவரும் நீங்கள்தானே அம்மா ? அப்படி உன் பிள்ளைகள் கூறும் அளவுக்கு உங்களைத் தெரிந்து கொண்டவர்களா? நீங்கள் சொல்ல மாட்டீர்களோ.

அன்று தமிழ் மக்களின் அரணாக புலிகள் இருந்தனர். முள்ளி வாய்க்காலிலும் அப்படி இருந்ததால் உலகம் சிங்களத்தோடு சேர்ந்து புலிகள் வலுக் கட்டாயமாக மக்களைக் கேடயமாக தடுத்து வைத்தனர் என்று குற்றம் சாட்டுகிறது. இப்படிச் சொல்லும் அளவுக்கு உமது பிள்ளைகளுக்கு நல்லறிவு இருக்கா?




28 நாட்களிலேயே சரா சரியாக 8.9 இறாத்தல் ஊளைச் சதையை இல்லாமல் செய்து இடைச் சுற்றில் 2 அங்குலத்தையும் குறைக்கிறது ஒரு வகை ஆபிரிக்க மாம்பழம். இந்த மாம்பழம் எல்.டி. எல். எனும் கொலஸ்ரோலையும் ஆபத்தை ஏற்படுத்த வல்ல றைகிளை செரைட்ஸையும் பெரிய செலவினம் ஏதும் இன்றியே குறைத்து விடுகிறதாம்.

இந்த அரிய வகை மாம்பழம் கமரூன் தேசத்து மழைக் காடுகளில் மட்டுமே வளரும் குட்டை வகை மாமரத்துக் கனிகளில் குறித்த அதிசய மருத்துவ குணம் உள்ளதாம்.

அமெரிக்க மக்களின் எடைக் குறைப்பு வணிகத்தில் 40 பில்லியன் டொலரை-க் கொண்டுள்ள சந்தை இப்போது இந்த மாம்பழத்தின் வரவால் பெரும் வருமான இழப்பை சகிக்க முடியாது திணறுவது தெரி-கிறது. முக்கியமாக எடை குறைப்புச் சத்திர சிகிச்சைத் துறை மிகப் பெரும் வருவாய் இழப்பை எதிர் நோக்கி வருகிறது. மாம்பழம் தரும் இனிப்பான சுவையோடு சுகமான வாழ்வையும் மலிவு விலையில் தருகிறது என்பது சுவையான செய்திதானே?

Providing quality catering in Germany




Catering Coordinator:
R.P. Paramesh

Tel: 02305 967375
Mobile: 01779391607




# மனம் திறந்து பேசுகின்றார் மனோ தத்துவ நிபுணர் Dr.மார்க்!

கேள்வி:- இன்று புலம் பெயர்ந்து வாழும் மக்களிடையே பல விதமான மன நோய்கள் காணப்பட்டு அவை அதிகரித்துக் கொண்டே செல்கிறது. இதற்குக் காரணம் என்ன?

பதில்:- இதற்குக் காரணங்கள் பலவுண்டு. முதலில் ஒரு குடும்பத்தை எடுத்துக் கொண்டால் கணவன் ,மனைவி பிள்ளைகள் வேறு வேறு விதமான மன நிலைக்குள்ளாகி வருகின்றார்கள். கணவரின் வேலைப்பழு, குடும்ப சுமை, தாயகத்திலுள்ளவர்களின் சுமை, பொருளாதார திண்டாட்டம் மனைவி-யின் குடும்பப்பழு பிள்ளைகளைகப் பராமரிக்கும் கடமை, நாளாந்த வேலைகள் போன்றவை பல விதமான மன சோர்வுகளைக் கொண்டு வரும் பிள்ளைகளை எடுத்துக் கொண்டால் கலாச்சார சமூகப் பிரச்சினைகள், வேற்றுமொழி, கல்வி அமைப்பு, எதிர்கால திட்டமிடல் நிலைப்பாடு போன்ற பிரச்சினைகளை சந்திக்கிறார்கள். இப்படியாக நாளாந்தம் ஒரு குடும்பம் பல வகையான பிரச்சினைகளை சந்திக்கும் நேரத்தில் மனச் சிக்கல், மனச் சோர்வு போன்ற நோய்களை எதிர் நோக்குகின்றனர்.

குடும்பத் தலைவரான கணவர் தனது பொறுப்பை சுமையாக எடுத்துக்கொண்டால் அதிக நேரம் ஒரு நாளைக்கு தொழில் செய்பவர்களாக இருக்கின்றார்கள். இதனால் தொழில் செய்யும் இடங்களில் அதிக நேரத்தைக் கழிப்பதினால் அவர்களது குடும்ப அங்கத்தவர்களுக்கும் அவர்களுக்குமிடையே தொடர்புகள் துண்டிக்கப்படுகின்றது.

அதே போன்று குடும்பத் தலைவியும் தனது வீட்டு வேலைகள், கணவருக்கும் பிள்ளைகளுக்கும் பணிவிடை செய்வது போன்ற வகையில் தமது நேரத்தை செலவழிக்கின்றார்கள். பிள்ளைகள் வீட்டுப் பாடம், பாடசாலை மற்றும் அவர்களின் பொழுதுபோக்குகளுடன் அவர்களின் நேரமும் கழிந்து விடுகின்றது. எனவே இவர்கள் குடும்பத்துக்கு என்று நேரம் ஒதுக்காது இப்படியாக நெருக்கடியான வாழ்க்கை முறை சக்கரத்தில் மாட்டிக் கொள்வதினாலே பல விதமான சமுகப் பிரச்சினைகளும், உளவியல் பாதிப்புகளும் ஏற்படுகின்றன.

கேள்வி:- இப்படி அதிகரித்து வரும் மன உளவியல் பிரச்சினைகளத் தீர்க்க முடியுமா? எப்படி?

பதில்:- இந்த நிலைப்பாட்டை நிச்சயமாக தீர்க்க முடியும். எப்படியெனில் முதலில் ஒரு குடும்பத்தில் ஏற்படும் பிரச்சினையை குடும்ப அங்கத்தவர்கள் அறிந்து கொள்ளுதல் வேண்டும். பல குடும்பங்களில் உள்ள உளவியல் பிரச்சினைகளை அனேகர் அறிந்து கொள்ள விரும்புவதில்லை. அப்படித்தான் அறிந்து கொண்டாலும் அதை எப்படித் தீர்ப்பது என்று வழி முறைகளை அறியாது இருக்கின்றார்கள். அப்படி அறிந்தவர்கள் மனநில ஆலோசனையைப் பெற வெட்கப்படுகின்றார்கள்.

எனவே உள்ளவில் பிரச்சினைகளை அறியாமல் இருப்பது, இல்லாவிடில் அறிந்தும் சரியான முறையில் சிகிச்சை பெறாமல் இருப்பது. இந்த உளவியல் பிரச்சினைகளை இன்னும் அதிகப் படுத்துவதேயாக இருக்கும். இப்படியான உளவியல் சம்பந்தமான நோய்கள் முளையிலேயே கிள்ளி எறியப்பட வேண்டும். இல்லா விடில் அவை பெரிய விருட்சமாகி குடும்பக் கட்டிடத்தை இடித்து அழித்து விடும். எனவே இந்த ஆபத்தான நிலையில் இருந்து தப்புதற்கு சிறய பிரச்சினைகள் ஏற்படும் போதே உடனடியாக அதற்கத் தீர்வு எடுக்க முயற்சி எடுக்கப்பட வேண்டும். இது எம்மவர் மத்தியில் கடின-மாக கருத்தப்படும் ஒரு நிகழ்வாகும். மன நோய்களைப் பொறுத்தவரையில் சிகிச்சை பெறுவதற்கு

எங்கே? எப்படி? யாரிடம் ஆலோசனை பெறுவது என்பது முக்கியமான விடையமாகும். முதலில் நம்பிக்கையான மனநல ஆலோசனையாளரைத் தேர்ந்தெடுத்தல் சிகிச்சையின் முதல் படியாகும்.

மன நோய்களில் இருப்பவர்கள் தங்களைத் தாமே மிகவும் வேகமாக தமது சூழலிலிருந்து மறைத்து ஒதுங்கி வாழ விரும்புவார்கள். தமது சூழலில் விட்டு நீங்கியோ மற்றவர்களுக்கு பிடிக்காத முறையில் நடந்து கொள்வதினால் சூழலிலிருந்து தம்மை அப்புறப்படுத்திக் கொள்வார்கள்.

இப்படியானவர்கள் இன்னும் ஒருபடி சென்று தங்களது மன சஞ்சலத்தினால் தங்களைத் தாங்களே காயப்படுத்தவும் முயற்சிப்பார்கள்.. இது மிகவும் மோசமான நிலையாகும். ஏனெனில் மன நோயினால் பாதிக்கப்பட்டவர்கள் தம்மைத்தாமே வெறுத்துக் கொள்வார்கள். அவர்களுக்கு ஏற்பட்ட நோய் ஏன் வந்தது என்று தங்களுக்குள்ளே ஒரு கேள்வியை எழுப்பி அதற்கு விடை காண முடியாது தவிப்பார்கள்.

இந்த உலகத்தில் தமக்கு மட்டும்தான் இந்த மனநோய் ஏற்பட்டதாக எண்ணிக்கொள்ளுவார்கள். இதனால் மனநல ஆலோசனையைப் பெற வெட்கப்படுவார்கள். இதனால் துரிதமாக சமுதாயத்தில் இருந்து விலகிவிடுவார்கள். அதுமட்டுமல்லாமல் இந்த மனநோயின் பாதிப்பினால் அனேகர் தற்கொலை முயற்சிகளிலுமிறங்கி தம்மைத் தாமே மாய்த்துக் கொள்ள முயற்சிக்கின்றார்கள்.

இப்படியாகப் பல விதமான மன நோயாளர்கள் பலவிதமான பாதிப்புக்குள்ளாகின்றார்கள். இவற்றுக்குத் தகுந்த சிகிச்சை விரைவில் பெற்றுக்கொள்ள வேண்டும். முதலில் இப்படியானவர்கள் ஒரு தகுந்த நம்பிக்கையான தமது இரகசியங்களைக் காக்கக் கூடிய ஒரு சிறந்த மன நல ஆலோசகரைத் தெரிந்து கொண்டு ஆலோசனை பெறலாம். ஒரு ஆலோசகரிடம் தமது பிரச்சினைகளை மனம் விட்டுப் பேசுவதே நோயில் பாதி குணமடைந்ததிற்கு அர்த்தமாகும். இதுவும் ஒரு சிகிச்சை முறை. பிரச்சினைகளைக் கேட்பதற்கு ஒரு நம்பிக்கையான ஒரு உள்ளம் இருக்குமானல் அது மிகச் சிறந்த மருந்தாகும்.

எனது அனுபவத்தில் பலர் எந்த வித மனநல பயிற்சிகளோ வேறு மருத்து உதவிகளோ இல்லாமல் அவர்களது பிரச்சினையைக் கேட்பதற்கு ஒரு நம்பிக்கையான ஆலோசகர் உண்டானால் அது போதும் என்று கேட்கும் செவிகள்சிகிச்சை முறையில் பூரண குணமடைந்து இருக்கிறார்கள். உதாரணமாக ஒரு இளம் யுவதி மிகவும் மன அழுத்தத்தினால் பாதிக்கப்பட்டு கணவன், பெற்றோர் எவருமே அவரைப் புரியாத வரையில் பல ஆண்டுகளாக மனம் பாதிக்கப்பட்ட நிலையில் இனி வாழ்வை முடித்து விடலாம் என்ற நிலைக்குத் தள்ளப்பட்டபொழுது எமது மன நல ஆலோசனை மையத்திற்கு வந்தாள். அவர் முதலில் என்னிடம் தனது பிரச்சினையைக் கூற ஆரம்பித்த பொழுது மிகவும் மனமுடைந்து கண்ணீர் மல்கிய நிலையில் இனி வாழ்வதற்கு தனக்கு விருப்பம் இல்லை என்ற நிலையில் இதுதான் தனது மன அழுத்தப் போராட்டத்தின் கடைசி முயற்சி என்று அவரது சோகத்தைப் பகிர்ந்து கொண்டார். குறிப்பிட்ட மருந்து வகைகளைப்பாவித்து இளைத்து விட்டதாக விளக்கம் கொடுத்தார். இப் பெண்ணிற்கு நான் “கேட்கும்செவிகள்“ ஆலோசனை முறையில் சிகிச்சையளித்தேன். இவர் குறுகிய காலத்தில் குணமடைந்து தமது குடும்பத்துடன் சந்தோஷமாக வாழ்க்கை நடத்தி வருகின்றார். இப்படி கடினமாக தம்மையும் தமது சூழலையும் கடினப்படுத்திக்கொள்பவர்கள் அநேகர். எனவே அறிவியல் பரந்த உலகத்திலே இன்று விஞ்ஞான துரித வாழ்க்கையில் நம்மை நாமே இழந்து இயந்திர வாழ்க்கை வாழ்கின்றோம். எமது மனநலத்தைப் பாதுகாக்க எமக்குப் போதிய நேரம் கிடைக்காமையினால் மனம் போன போக்கிலே அலட்சியமாக விட்டு விடுகிறோம். அது எவ்வளவு தூரம் ஆபத்தானது என்று மன அழுத்தத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் அறிவர். எனவே மன அழுத்தம் உள்ளவர்கள் தாமதிக்காது உடனே தகுந்த ஆலோசனையைப் பெறுவது நன்று.

கேள்வி:- இன்று இளம் சமுதாயத்தினர் அதிக அளவு ம்னநோய்களினால் பாதிக்கப்பட்டு வருகின்றனர் என்று அண்மைக்கால புள்ளிவிபரங்கள் கூறுகின்றன. இவர்கள் எப்படியான மனக் குழப்பங்களுக்குள்ளாக்கப்படுகின்றனர்?

பதில்:- (அடுத்த இதழில்.)

# வல்வெட்டித்துறை




வெள்ளையம்மா

நாட்டிலுள்ள ஒவ்வொரு கிராமங்களும், நகரங்களும் தங்களுக்கென தனியானதொரு பாரம்பரியத்தை, கலாச்சாரத்தை, பண்பாடுகளை, அரசியல் வரலாறுகளை தாங்கிக் கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் வல்வெட்டித்துறை என்னும் நகரத்தின் வரலாற்றை நாம் தேடியபோது பெரும் புதையலே அந்த நகரத்தினுள் அடங்கியிருந்ததை நம்மால் அறிய முடிந்தது!

வல்வெட்டித்துறை யாழ்ப்பாணத்தில் இருந்து வடக்கே பதினாறு மைல் தூரத்திலும், காங்கேசன்துறையிலிருந்து கிழக்கே ஒன்பது மைல் தூரத்திலும், பருத்தித்துறையிலிருந்து மேற்கே ஐந்து மைல் தூரத்திலும், தென் இந்தியாவில் இருந்து தெற்கே கடல்மார்க்கமாக முப்பது மைல் தூரத்திலுமான ஒரு துறைமுகப் பட்டினமாகும். 1947ம் ஆண்டு முதல் பட்டினசபையாக இயங்கி வந்த ஆதி வல்வை இன்று நகரசபையாக இயங்குகின்றது.



“கோவில் இல்லாத ஊரில் குடியிருக்காதே” என தமிழ் மூதாட்டியான ஔவைப் பாட்டியின் முதுமொழி ஒன்று உண்டு. வல்வெட்டித்துறையில் திரும்பிய பக்கமெல்லாம் ஆலயங்களைக் காணலாம்! அவ்வளவு கடவுள் பக்தி நிறைந்தவர்கள் வல்வை மக்கள். வல்வையில் புகழ் பெற்ற ஆலயங்களாக “வல்வை வைத்தீஸ்வரன் கோவில்” “வல்வை முத்துமாரி அம்மன் ஆலயம்” “நெடியகாடு சிற்றம்பலம் பிள்ளையார் கோவில்” “பொலிகண்டி கந்தவனக்கடவை கந்தசாமி கோவில்” “வேவில் வீரகத்தி விக்கினேஸ்வரர் ஆலயம்” “தொண்டமானாறு செல்வச்சந்நிதி முருகன் ஆலயம்” இவைகளுடன் “புனித செபஸ்தியார் றோமன் கத்தோலிக்க தேவாலயமும் பிரசித்தி பெற்ற ஆலயங்களாகும். இதில் செல்வச்சந்நிதி ஆலயத்தின் அருகே ஓடிக்கொண்டிருக்கின்ற தொண்டமானாறு முன்பு “வல்லி நதி” என்னும் பெயருடனேயே அழைக்கப்பட்டதாகவும் இந் நதியின் தொடுவாயிலை தொண்டமான் என்னும் அரசன் வெட்டிக் கடலுடன் சங்கமிக்க விட்டதால் அதற்கு தொண்டமானாறு எனப் பெயர் வந்ததாகவும் ஒரு வரலாற்றுப் பதிவும் உண்டு.

இலங்கை என்றொரு நாடு இருப்பதை அறியாதிருந்த எத்தனையோ உலக நாடுகள் இருந்த காலம் ஒரு காலத்தில் இருந்ததுண்டு! தமிழ் மக்களின் உரிமைகளை மீட்டெடுக்கவென விடுதலைப் புலிகள் இயக்கம் ஆரம்பிக்கப்பட்டு அதன் செயற்பாடுகள் போராட்டமாக வெடிக்கத்தொடங்கிய பொழுதுதான் இலங்கையை உலகம் திரும்பிப் பார்க்கத்தொடங்கியது! அப்பேர்ப்பட்ட விடுதலை இயக்கத்தின் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்கள் பிறந்த மண் என்னும் சிறப்பை வல்வெட்டித்துறை பெறுகின்றது.

பிரபாகரனைப்போலவே பிற போராளிகளான குட்டிமணி, தங்கத்துரை, நடேசதாசன் போன்ற விடுதலைப்போராளிகளோடு சதாசிவம் கிருஸ்ணகுமார் என்ற கிட்டுவை தந்த மண்ணும் வல்வெட்டித்துறைதான் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இந்திய ஸ்ரீலங்கா அரசுகளின் கூட்டுச் சதியால் பலாலியில் சைனட் உட்கொண்டு வீரச்சாவை அணைத்துக்கொண்ட குமரப்பா, புலேந்திரன், அப்துல்லா, ரகு, நளன், பழனி, மிரேஸ், கரன், அன்பழகன், தவக்குமார்,ரெஜினோல்ட், ஆனந்தகுமார் ஆகிய பன்னிரண்டு தியாகிகளுக்கும் வல்வெட்டித்துறையில் நினைவாலயம் அமைக்கப்பட்டு அவ் வீதிக்கு மாவீரர் வீதி எனவும் பெயரிடப்பட்டது. இப்பொழுது அந்த நினைவாலயம் ஸ்ரீலங்கா இராணுவத்தால் அழிக்கப்பட்டுவிட்டது. இதே போலவே தேசியத்தலைவர் பிரபாகரன் அவர்களது இல்லமும் இராணுவத்தால் அழிக்கப்பட்டதும் குறிப்பிடத்தக்கதாகும்.

கப்பலோட்டிய தமிழன் என்றால் அது தமிழ்நாட்டைச் சேர்ந்த சுதந்திரப் போராட்டத் தியாகி வ.உ.சிதம்பரப்பிள்ளை தான் எனத் தமிழ் சினிமா நமக்குச் சொல்லி வைத்திருக்கின்றது. ஆனால் சிதம்பரப்பிள்ளை அவர்கள் பணம் கொடுத்து கப்பல் வாங்கி கப்பல்ப் பயணத்தை ஆரம்பிப்பதற்கு முன்னரே வல்வெட்டித்துறையில் இருந்து திரு.கே. தம்பிப்பிள்ளை என்னும் கப்பலோட்டியின் தலைமையில் “அன்னபூரணி” என்ற பாய்மரக் கப்பலை வல்வெட்டித்துறையில் இருந்து அமெரிக்காவிற்கு செலுத்திச் சென்று கப்பலோட்டிய தமிழர்கள் என்னும் பெருமையைப் பெற்றவர்கள் வல்வெட்டித்துறைத் தமிழர்கள்! 1974ம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற நான்காவது உலகத் தமிழாராட்சி மாநாட்டின் ஊர்திகள் பவனியில் இந்த அன்னபூரணி கப்பலின் மாதிரி உருவொன்றை அமைத்து வல்வைத் தமிழர்களின் சிறப்பை உலகறியச்செய்திருந்தார்கள்!

கப்பல் கட்டும் தொழிலில் கரையோரப் பட்டினங்களான பருத்தித்துறை, வல்வெட்டித்துறை, காங்கேசன்துறை, ஊர்காவற்துறை, மாதகல் ஆகிய ஊர்களைச் சேர்ந்தவர்கள் பிரபல்யமானவர்களாக இருந்தாலும் வல்வெட்டித்துறையிலேயே அதிகமான கப்பல் முதலாளிகளும், திறமையான தண்டல்களும் (காப்டன்கள்) இருந்திருக்கின்றார்கள். வல்வெட்டித்துறையில் இருந்து மட்டும் ஐம்பதிற்கும் மேற்பட்ட கப்பல்கள் கட்டப்பட்டிருப்பதாக வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன.

இரண்டு பெரும் நீச்சல்வீரர்களான திரு. மு. நவரத்தினசாமி, ஆழிக்குமரன் ஆனந்தன் ஆகிய இருவரையும் நமக்குத் தந்த பெருமையும் வல்வெட்டித்துறைக்கே உண்டு!

அமரர் திரு. நவரத்தினசாமி அவர்கள் 1954ம் ஆண்டு வல்வெட்டித்துறையில் இருந்து தென் இந்தியாவின் கோடிக்கரையிலான 32 மைல் நீளமான பாக்கு நீரிணையை 26 மணி 30 நிமிடத்தில் முதல் முதலாக நீந்திக் கடந்து சாதனை புரிந்தவராவார். அப்பொழுது அவருக்கு வயது 45 ஆகும்.

1945ல் வல்வெட்டித்துறையில் பிறந்த திரு. ஆழிக்குமரன் ஆனந்தன் அவர்கள் ஒரு வழக்கறிஞர் ஆவார்! ஆனால் சட்டத்துறையைவிட சமூகத்துறையிலேயே அவரது நாட்டம் அதிகமாக இருந்தது. நவரத்தினசாமி நீந்திக் கடந்த அதே பாக்கு நீரிணையை 1963ம் ஆண்டு இவர் நீந்திக் கடந்து சாதனை புரிந்தபோது ஆனந்தனுக்கு வயது 18 ஆகும்!. மேலும் இவர் 1979ம் ஆண்டு கொழும்பில் 187 மணிநேரம் இடைவிடாது 1487 மைல்கள் சைக்கிள் ஓட்டி உலகசாதனை புரிந்து கின்னஸ் புத்தகத்தில் தனது பெயரை பதிவு செய்துள்ளார்!. இவைதவிர 136 மணிநேரம் போல் பஞ்சிங் செய்து உலக சாதனை நிகழ்த்தியமை!, இரண்டு நிமிடங்களில் 165 தடவைகள் இருந்து எழும்பி உலகசாதனை நிகழ்த்தியமை, 33 மணிநேரம் ஒற்றைக்காலில் நின்று உலக சாதனை நிகழ்த்தியமையுடன், சென்னை அண்ணா நீச்சல் தடாகத்தில் தொடர்ந்து 80 மணிநேரம் தவளை போல வாழ்ந்து தமிழக மண்ணிலும் சாதனை புரிந்துள்ளார். இந்த அனைத்து நிகழ்வுகளும் கின்னஸ் புத்தகத்தில் இடம்பெற்றவையும் குறிப்பிடத் தக்கவையாகும்.

யாழ்ப்பாணத்தில் புகழ் பெற்ற சில விளையாட்டுக் கழகங்களில் வல்வெட்டித்துறையில் உள்ள உதயசூரியன் விளையாட்டுக்கழகம், வல்வை றெயின் போஸ் விளையாட்டுக் கழகம், வல்வை புளுஸ் விளையாட்டுக் கழகம் ஆகியவை முக்கியமானவை. இக் கழகங்க வட மாகாண ரீதியாக கலை, விளையாட்டு, நாடகப் போட்டிகளை நடாத்தி மதிப்பு மிக்க பரிசில்களை வழங்கி கலைஞர்களை ஊக்குவித்து வந்தமை குறிப்படத் தக்கமையாகும்.

வல்வெட்டித்துறை பருத்தித்துறை பாராளுமன்றத் தொகுதிக்குள்ளேயே அடங்குகின்றது. 1960ம் ஆண்டுவரை உடுப்பிட்டித் தொகுதியும் பருத்தித்துறை தொகுதியுடனேயே இணைந்திருந்தது. இது மிகவும் பெரிய தொகுதியாக இருந்த காரணத்தால் 1960ல் உடுப்பிட்டி என்ற தனியானதொரு தொகுதி உருவாக்கப்பட்டது. பருத்தித்துறை தொகுதியில் ஆரம்பத்தில் திரு.சி.பாலசிங்கம் என்பவரே பாராளுமன்ற உறுப்பினராக இருந்துள்ளார்.

(ஆண்டு தெரியவில்லை) அதன் பின்னர் அமரர் திரு.ஜி.ஜி. பொன்னம்பலம் அவர்கள் தமிழ்க் காங்கிரஸ் கட்சியின் சார்பில் வெற்றி பெற்று இந்தத் தொகுதியின் பாராளுமன்ற பிரதிநித்துவத்தைப் பெற்றிருந்தார். 1956ல் நடந்த தேர்தலில் இலங்கைக் கம்யூனிஸ்ற் கட்சியைச் சேர்ந்த தோழர் பொன். கந்தையா அவர்கள் இத் தொகுதியில் வெற்றி பெற்றிருந்தார். தொடர்ந்து 1960ல் இருந்து 1983ம் ஆண்டுவரை இலங்கைத் தமிழரசுக் கட்சி சார்பாகவும், தமிழர் விடுதலைக் கூட்டணி சார்பாகவும் திரு.க.துரைரத்தினம் அவர்களே பருத்தித்துறைத் தொகுதியின் பாராளுமன்ற உறுப்பினராக இருந்திருக்கின்றார். பின்னர் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு சார்பாக திரு.சிவாஜிலிங்கம் அவர்களும் இதே தொகுதியில் பாராளுமன்ற உறுப்பினர்களாக இருந்திருக்கின்றார்கள்.

இதில் இன்னொரு சிறப்பு என்னவென்றால் வடபகுதியில் இருந்து பாராளுமன்றம் சென்ற ஒரேயொரு கம்யூனிஸ்ட் கட்சிப் பாராளுமன்ற உறுப்பினர் என்ற பெருமை தோழர் பொன். கந்தையாவிற்கு மட்டுமே உண்டு இதே காலத்தில் பருத்தித்துறைத் தொகுதியில் போட்டியிட்டு தோல்வியடைந்த வல்வைப் பிரமுகர்களையும் நாம் மறந்துவிட முடியாது. அவர்களில் முக்கியமானவர்கள் திரு.எஸ்.எஸ்.சுந்தரலிங்கம், திரு.கு.மோதிலால் நேரு, திரு.ம.ஞானச்சந்திரன், திரு.பொ.கனகராசா போன்றவர்களாவார்கள்.

தமிழ்க் கட்சிகளை ஒருங்கிணைத்து தமிழர் விடுதலைக் கூட்டணி உருவாகிய இடமும் வல்வெட்டித்துறைதான்! ஈழத் தமிழர்கள் மத்தியில் தமிழ் என்னும் வார்த்தையை மையமாகக் கொண்டு பல அரசியல் கட்சிகள் இருந்தன. ஆரம்பத்தில் தமிழ் இளைஞர் காங்கிரஸ், அதன் பின்னர் இலங்கைத் தமிழ்க் காங்கிரஸ், இலங்கைத் தமிழரசுக் கட்சி, அடங்காத் தமிழன் திரு.செ.சுந்தரலிங்கத்தின் ஈழத்தமிழர் ஒற்றுமை முன்னணி, காவலூர் திரு.க.நவரத்தினம் அவர்களின் தமிழர் சுயாட்சிக் கழகம், மலைநாட்டுத் தமிழருக்காக இலங்கை இந்திய காங்கிரஸ், இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ், ஆகிய கட்சிகள் இருந்தன. 1956ல் தனிச் சிங்களச் சட்டம் அமுல்ப்படுத்தப்பட்ட வேளையில் இந்தக் கட்சிகளை ஒன்றிணைக்கும் முயற்சியில் அன்று பிரதம நீதியரசராகவும், இடைக்கால மகாதேசாதிபதியாகவும் பதவி வகித்த திரு.செ. நாகலிங்கம் அவர்கள் பெரும் முயற்சி எடுத்தார். ஆனால் அவரது முயற்சி அன்று பலனளிக்கவில்லை.

1972ம் ஆண்டில் தமிழர்களின் மேலும் சில அடிப்படை உரிமைகள் பறிக்கப்பட்ட நிலையில் புதிய குடியரசு யாப்பு அமுலுக்கு வர இருந்த வேளையில் முன்னணித் தமிழரசுக் கட்சிகளை ஒன்றிணைப்பதற்காக 07-02-1971 அன்று வல்வெட்டித்துறையில் உள்ள பிரபல வர்த்தகர் திரு.செல்லத்துரை தங்கவடிவேல் அவர்களது இல்லத்தில் ஒரு ஒருங்கிணைப்புக் கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. அந்தக் கூட்டத்தில் திரு.எஸ்.ஜே.வி. செல்வநாயகம், திரு.அ.அமிர்தலிங்கம், திரு.மு.சிவசிதம்பரம், அடங்காத் தமிழன் திரு.செ.சுந்தரலிங்கம், சாவகச்சேரி திரு.வ. நவரத்தினம், யாழ் மேயர் சி.நாகராசா உட்பட பல பிரபலமான அரசியல் தலைவர்கள் பலர் கலந்திருந்தார்கள். அன்றுதான் தமிழர் கூட்டணி உருவான நாள். (பின்னர்தான் தமிழர் விடுதலைக் கூட்டணி எனப் பெயர் மாற்றம் பெற்றது) இந்த ஒற்றுமை முயற்சிக்கு வித்திட்டவர்கள் வல்வெட்டித்துறையைச் சேர்ந்த திரு.ச.ஞானமூர்த்தி, திரு.அரு.சபாரத்தினம், திரு. வேற்பிள்ளை ஆகியோராகும்.

அதன் பின்னர் 1977ம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில் தமிழர் விடுதலைக் கூட்டணி 18 தொகுதிகளில் மாபெரும் வெற்றியடைந்ததும் அதன் முதலாவது வெற்றிவிழாக் கூட்டம் 30-07-1977ல் திரு.ஞானமூர்த்தி தலைமையில் வல்வெட்டித்துறை வேரடி மைதானத்திலேயே நடைபெற்றது.

இத்தகைய வரலாற்றுப் பதிவுகளோடு வல்வையில் பிறந்த கல்விமான்களைப்பற்றி இனிப் பார்ப்போம். திரு. அரு.சபாரத்தினம் அவர்களின் புதல்வர் திரு அரு.சபா.ராஜேந்திரன் அவர்கள் வல்வை நகருக்குப் புகழ் சேர்த்தவர்களில் ஒருவராவார். தனது ஆரம்பக் கல்வியை வல்வை அமெரிக்கன் மிசன் கல்லூரியில் ஆரம்பித்து பருத்தித்துறை காட்லிக் கல்லூரி, பேராதனைப் பல்கலைக் கழகம், லண்டன் கேம்பிரிச் பல்கலைகழகம் வரை சென்று கல்வி கற்று சிங்கப்பூர், சென்னை போன்ற இடங்களில் பேராசிரியராகக் கடமையாற்றியிருக்கின்றார்.



வல்வையில் பிறந்த புகழ் பெற்ற கல்விமான்களில் திரு. பொன் ஸ்ரீஸ்க்காந்தராஜாவும் ஒருவராவார். இவர் தனது பட்டப் படிப்புகளை முடித்த பின்னர் 1931ம் ஆண்டு சட்டத்தரணியாகப் பதவியேற்றவர். பின்னர் படிப்படியாக முன்னேறி 1938ல் நீதிபதியாகவும், பின்னர் உயர்நீதிமன்ற மேல்நீதிமன்ற நீதிபதியாகவும் பதவி வகித்தவராவார். இதேபோல வல்வையில் பிறந்த திரு.பாலவடிவேல் அவர்கள் 1959ல் உயர் நீதிமன்ற சட்டத்தரணியாகி 1990ல் உயர் நீதிமன்ற நீதிபதியாகியவர். மேலும் சட்டத்தரணி மோதிலால் நேரு உட்பட பதினான்கு ஆண் சட்டத்தரணிகளும், நான்கு பெண் சட்டத்தரணிகளும் வல்வை மண்ணுக்குரியவர்களாக இருந்திருக்கின்றார்கள்.

இலக்கியவாதிகளைப் பார்க்கும்போது பலகாலமாக தமிழ்த் தொண்டன் என்னும் பத்திரிகையை நடாத்தி வந்த வித்துவான் வ.மு.கனகசுந்தரம், "வல்வெட்டித்துறை ஊரின்னிசை" என்னும் இலக்கிய நூலைத் தந்த செ.வைத்திலிங்கம்பிள்ளை, மற்றும் பண்டிதர் சங்கர வைத்திலிங்கம் அவர்களும் வல்வையின் புதல்வர்களே.

பத்திரிகையாளர் ,.ஈ.கே..ராஜகோபால் அவர்களை தெரியாதவர்கள் இருக்கமுடியாது! "விவேகி" என்னும் மாத சஞ்சிகையின் ஆசிரியராகப் பத்திரிகைத் துறைக்குள் நுழைந்து, பின்னர் பாமராஜகோபால் என்னும் பெயருடன் ஈழநாடு ஆசிரியர் பீடத்தை அலங்கரித்து, தொடர்ந்து கொழும்பு ஏரிக்கரைப் பத்திரிகை நிறுவனமான தினகரன் பத்திரிகையில் திரு சிவகுருநாதன் அவர்களுக்குக் கீழ் துணை ஆசிரியராகவும் பணியாற்றியவர். தற்பொழுது இலண்டனில் வாழ்ந்துவரும் இவர் அங்கும் புதினம் என்னும் பத்திரிகையை நடாத்தி வருகின்றார். இவர் ஈழநாடு பத்திரிகையில் பணியாற்றிய காலத்தில் தொடராக எழுதிய "ஆழிக்குமரன்" மற்றும் "கப்பலோட்டிய தமிழர்கள்" ஆகிய இரு வரலாற்றுப் பதிவுகளையும் நூலாக வெளியிட்டு தான் பிறந்த மண்ணின் பாசத்தை வெளிப்படுத்தியதுடன், வல்வெட்டித்துறையின் புகழையும் உலகறியச் செய்துள்ளார்.

இதுபோல இன்னும் பல வரலாற்றுப் பதிவுகளும், சிறப்புக்களும் வல்வை மண்ணுக்கு உண்டு. நான் தேடிய இவ் வரலாற்றுச் சிறப்புகளில் மிக முக்கியமாகத் தெரிந்துகொண்டது வல்வை மக்களின் ஒற்றுமை பற்றியது! இந்த ஒற்றுமை மேலும் வலுவடைந்து தமிழ் இனத்திற்குப் பெருமை சேர்க்கவேண்டும். தமிழர் பெருமை உலகெங்கும் பரவ வேண்டும்.




ஈழப்போரில் இந்தியாவின் முப்பரிமான 'ராடார்' சிங்களத்துக்கு புலிகளை வீழ்த்த பெரிதும் உதவியதை நீங்கள் அறியலாம். தாக்குதல் இலக்கை குறி வைக்க இந்த வகை 'ராடார்' போதுமானதாக இருக்கலாம். ஆனால் வானத்தில் விமானங்களை ஓட்டுவதற்கு இப்போது மிக அதிக அளவில் விமானங்கள் பறப்பதால் விபத்துகளில் இருந்து தப்பித்துக் கொள்ள இப்போதுள்ள 'ராடார்' வகை போதுமானதாக இல்லை. இப்போதுள்ள குளோபல் 'பொசிசனிங் சிஸ்ரம்' எனப்படும் பூமியில் நிலை அறி கருவி மூலம் விமான ஓட்டிகள் வழிகாட்டப் பட்டாலும் அதே வானப் பரப்பில் பறக்கும் ஏனைய விமானங்களைக் காட்டும் வசதிகள் இல்லாத படியால் விபத்துகளை நூறு வீதம் தவிரப்பது சாத்தியமில்லாது இருக்கிறது.

இதற்கு முடிவு கட்டும் வகையில் வானத்தின் குறித்த எல்லைப் பகுதியில் அனைத்து வகை பறக்கும் கருவிகளையும் திரையில் காட்டி நாம் தெரு வீதியில் போகும் போது எப்படி எல்லா வாகனங்களையும் கவனித்து வண்டியைச் செலுத்துகின்றோமோ அதே மாதிரி வருங்காலத்தில் விமான ஓட்டிகள் வான் பரப்பில் காட்சியைத் தத்ரூபமாகப் பார்த்து செயற்பட முடியும். அதற்குத்தான் இந்த புதிய வகை ராடார்.

# இலக்குவைக்கப்படும் பத்திரிகையாளர்கள்!

## உதயன் குகநாதன் மீதான தாக்குதலின் பின்னணி என்ன?

## இராணுவ புலனாய்வுப் பிரிவின் விசேட பயிற்சிபெற்ற கொலைக்குழு ஒன்று களத்தில் இறக்கப்பட்டுள்ளதா?

கொழும்பிலிருந்து பவித்திரன்

யாழ்ப்பாணத்தில் மீண்டும் ஒரு பத்திரிகையாளர் தாக்கப்பட்டுள்ளார். தாக்கப்பட்டுள்ளார் என்பதைவிட நன்கு திட்டமிடப்பட்ட படுகொலை முயற்சி ஒன்றிலிருந்து அவர் அதிஷ்டவசமாகத் தப்பித்துக்கொண்டுள்ளார் என்றுதான். அவர் மீது நடத்தப்பட்டுள்ள தாக்குதல் வெறும் தாக்குதலாக இல்லாமல், அவரைப் படுகொலை செய்வதற்கான ஒரு முயற்சியாகவே இருந்துள்ளது என்பதைத்தான் உணர்த்துகின்றது அவரது தலையில் ஏற்பட்டுள்ள காயம் உள்ளது. யாழ். மருத்துவமனை வட்டாரங்களும் இதனை உறுதிப்படுத்தியிருக்கின்றன. பத்திரிகையாளர்கள் தாக்கப்படுவது, பத்திரிகை நிறுவனங்கள் இலக்கு வைக்கப்படுவது என்பன இலங்கையைப் பொறுத்தவரையில் புதிதல்ல. ஆனால், உதயன் பத்திரிகையின் செய்தி ஆசிரியரும் சிரேஷ்ட பத்திரிகையாளருமான ஞானசுந்திரம் குகநாதன் யாழ்ப்பாணத்தில் வைத்துத் தாக்கப்பட்டுள்ளதன் பின்னணியில் பல செய்திகள் உள்ளன. தமிழர்களின் உரிமைகளுக்காகக் குரல் கொடுக்கும் பத்திரிகையாளர்கள் அனைவருக்கும் விடுக்கப்பட்டுள்ள ஒரு எச்சரிக்கையாகவே இதனைக் கருத வேண்டும்.

சுதந்திரமான ஊடகத்துறைக்கு மிகவும் ஆபத்தான நாடுகளில் ஒன்றாக இலங்கை உள்ளது என சர்வதேச ரீதியாக ஊடக சுதந்திரத்துக்காகக் குரல் கொடுக்கும் அமைப்புக்கள் சில அண்மையில் அறிவித்திருந்தன. இலங்கைக்கு விஜயம் செய்து இங்குள்ள நிலைமைகள் தொடர்பில் விரிவாக ஆராய்ந்த பின்னர் வெளியிட்டிருந்த அறிக்கை ஒன்றிலேயே இந்தக் கருத்து வெளியிடப்பட்டிருந்தது. மாற்றுக் கருத்தைக் கொண்டிருத்தல், கருத்தை வெளிப்படுத்தல், மற்றும் தகவல்களை வெளியிடும் சுதந்திரத்தை இழந்தமையினால் வரலாற்றில் உயிரைப் பலிகொடுத்தவர்களின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே செல்கின்றது. ஊடக அடக்குமுறையுடன் சம்பந்தப்பட்ட கொலைகள், தாக்குதல்கள் என்பன தொடர்ந்தும் அதிகரித்துச் செல்கின்ற போதிலும், இன்றுவரையில் இதில் சம்பந்தப்பட்ட எவரும் கைது செய்யப்படவோ அல்லது தண்டனைக்குள்ளாக்கப்படவோ இல்லை. இது தொடர்பில் அரசின் வாக்குறுதிகள் அனைத்தும் அந்த வேளையில் உருவாகும் அழுத்தங்களைச் சமாளிப்பதற்கானதாக மட்டுமே இருந்துள்ளது.

ஊடக அடக்குமுறை இனத்தையோ அல்லது மொழியையோ அடிப்படையாகக் கொண்டதாக இருக்காத போதிலும், இதனால் அதிகளவுக்கு இழப்புக்களைச் சந்தித்தவர்களாக தமிழர்களே உள்ளனர். குறிப்பாக தமிழ் மக்களின் தகவல் தெரிந்துகொள்ளும், கருத்துக்களைக் கொண்டிருக்கும், வெளிப்படுத்தும் சுதந்திரத்துக்கு விடுக்கப்பட்ட அச்சுறுத்தல் சரித்திரத்தில் மிக மோசமானதாகும். 1981 ஆம் ஆண்டு தமிழர்களின் குரலாக வெளிவந்துகொண்டிருந்த ஈழநாடு பத்திரிகை அலுவலகம் பொலிஸாரினால் தீவைத்துக்கொழுத்தப்பட்டதன் மூலம் தமிழர்களின் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்தை அடக்குவதற்கான அரசின் செயற்திட்டம் ஆரம்பமானது. இது தமிழர்களின் உரிமைப் போராட்டத்தை அடக்குவதற்கான அரசின் திட்டமிட்ட சதித் திட்டங்களில் ஒன்றாகவே இருந்தது. ஏனெனில் தமிழர்களின் அடிப்படை அபிலாஷைகள் தொடர்பில் குரல் கொடுத்தல், அது தொடர்பிலான செய்திகளை வெளியிடுதல் என்பனவே ஈழநாடு மீதான தாக்குதலுக்குக் காரணமாக இருந்தது. ஈழநாட்டை எரித்து அழித்துவிட்டால் இதனையும் நிறுத்திவிட முடியும் என ஆட்சியாளர்கள் அப்போது கணக்குப் போட்டார்கள்.

அப்போது ஆரம்பமான தமிழ் ஊடகத்துறை மீதான தாக்குதல்கள் இன்றுவரையில் தொடர்ந்துகொண்டிருப்பதைத்தான் உதயன் பத்திரிகையின் செய்தி ஆசிரியர் ஞா.குகநாதன் மீதான தாக்குதல் உணர்த்துகின்றது. போர் முடிவுக்கு வந்துவிட்ட போதும் தமிழ் ஊடகவியலாளர்கள் இலக்குவைக்கப்படுவது தமிழர்களின் உரிமைகள் தொடர்பாகக் குரல் கொடுப்பவர்களுக்கு விடுக்கப்பட்டுள்ள ஒரு எச்சரிக்கையாகவே இருக்கின்றது.

யாழ்ப்பாணத்தைப் பொறுத்தவரையில் உள்ளூராட்சிமன்றங்களுக்கான தேர்தல்கள் நடைபெற்று ஒருவார காலப்பகுதியில் இத்தாக்குதல் இடம்பெற்றிருக்கின்றது. உள்ளூராட்சிமன்றங்களுக்கான தேர்தல்களில் ஆளும் கட்சி வடபகுதியில் சந்தித்த அவமானகரமான படுதோல்விக்கு ஊடகங்களின் பங்களிப்பும் பிரதானமானதாக இருந்துள்ளது. இலவசங்களை வழங்கி, அபிவிருத்தித் திட்டங்களை ஆரம்பித்து மக்களைக் கவர்ந்து வாக்குகளைப் பெறுவதற்கும், அச்சுறுத்தல்கள் மூலமாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு மக்கள் வாக்களிப்பதைத் தடுப்பதற்கும் பல முனைகளில் ஆளும் கட்சி முனைந்த போதிலும், மக்கள் உற்சாகமாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு வாக்களித்தனர். ஊடகங்களின் பங்களிப்பு இதன் பின்னணியில் இருந்ததுதான் ஊடகங்கள் மீது இலக்கு வைக்கப்பட்டமைக்குக் காரணமாகும்.

உதயன் பத்திரிகையும், உதயன் பணியாளர்களும் தாக்குதலுக்குள்ளாவது இதுதான் முதல்முறையல்ல. 3 வருடங்களுக்கு முன்னர் உதயன் பத்திரிகையின் அலுவலகம் ஆயுதக் குழு ஒன்றின் தாக்குதலுக்குள்ளானபோது அங்கிருந்த நான்கு ஊடகப் பணியாளர்கள் கொடூரமான முறையில் படுகொலை செய்யப்பட்டனர். அப்போது குகநாதனைக் கொலையாளிகள் தேடிய போதிலும், அவர் அந்த வேளையில் தப்பிச் சென்றுவிட்டிருந்தமையால் அதிஷ்டவசமாக உயிர் தப்பினார். அதன் பின்னரும் குகநாதனை இலக்கு வைத்து கொலையாளிகள் உதயன் அலுவலகத்துக்குச் சென்றிருக்கின்றார்கள். ஆக, குகநாதன் கொலைக் கும்பல் ஒன்றினால் நீண்ட காலமாக இலக்குவைக்கப்பட்ட ஒருவராகவே இருந்திருக்கின்றார் என்பது உண்மை. இதன் காரணமாக கடந்த மூன்று வருட காலமாக வீட்டுக்குக் கூடச்செல்லாமல் அவர் 24 மணி நேரமும் அலுவலகத்திலேயே தங்கியிருந்தார். இருந்த போதிலும் போரும் முடிவுக்கு வந்து ஒரு சுமூக நிலை தோன்றிவிட்டது என்ற நம்பிக்கையிலேயே அவர் அலுவலகத்துக்கு அருகில் வீடொன்றை எடுத்து குடும்பத்துடன் தங்கியிருந்தர்.

இந்தநிலையில்தான் ஜூலை 29 ஆம் திகதி வெள்ளிக்கிழமை இரவு 7.30 மணியளவில் இரவு உணவுக்காக வீடு நோக்கிச் சென்றுகொண்டிருந்த போது அவரைப் பின்தொடர்ந்து சென்ற அல்லது, அவரது வருகைக்காகக் காத்திருந்த இருவரது தாக்குதலுக்கு அவர் இலக்காகியிருக்கின்றார். உதயன் அலுவலகம் யாழ் நகரில் கஸ்தூரியார் வீதியில் நாவலர் வீதிச் சந்திக்கு அண்மையில் அமைந்துள்ளது. அங்கிருந்து சுமார் 10 நிமிட நடை துூரத்திலுள்ள நாவல் வீதியிலுள்ள தனது வீட்டுக்கு நடந்து சென்றுகொண்டிருந்த போதுதான் அவர் மீது தாக்குதல் நடத்தப்பட்டுள்ளது. நாவலர் வீதிச் சந்தியிலுள்ள இராணுவக் காவலரணியிலிருந்து சுமார் 30 யார் துூரத்திலேயே இத்தாக்குதல் சம்பவம் நடைபெற்றிருக்கின்றது என்பதும் கவனிக்கத்தக்கது. அதாவது, தாக்குதல் நடத்தியவர்களுக்கு இராணுவம் தொடர்பிலான அச்சம் இருக்கவில்லை. இது பலவிதமான சந்தேகங்களைத் தோற்றுவிக்கின்றது.

கூரிய இருப்புக் கம்பி ஒன்றைப் பயன்படுத்தி குகநாதனின் பின் தலையில் மா்ம நபர்கள் மிகவும் பலமாகக் குத்தியுள்ளார்கள். இதனைவிட அவரது வயிற்றுப் பகுதியிலும் இரும்பக் கம்பியால் தாக்கப்பட்டுள்ளார். உடனடியாக இரத்தம் பாய்ந்தோடிய நிலையில் அருகேயுள்ள தனது வீட்டுக்கு ஓடிச் சென்ற அவர் அங்கு மயக்கமடைந்துவிழுந்ததாகத் தெரிவிக்கப்படுகின்றது. தாக்குதல் நடத்தியவர்கள் உடனடியாகவே தாம் வந்த மோட்டார் சைக்கிளில் தப்பிச் சென்றுவிடடார்கள். மருத்துவமனையில் இரண்டு நாட்கள் மயக்கமடைந்த நிலையிலிருந்த குகநாதன் பின்னர் ஆபத்தான கட்டத்தைத் தாண்டிவந்துவிட்டதாக மருத்துவமனை வட்டாரங்கள் தெரிவிக்கின்றன. ஊடகத்துறைக்கே தன்னை அர்ப்பணித்த குகநாதன் சுகமடைந்தாலும் அவரால் எதிர்காலத்தில் முன்னர் போல உற்சாகமாகச் செயற்பட முடியுமா என்பது கேள்விக்குறியாகத்தான் இருக்கப்போகின்றது. ஏனெனில் அவரது உடலில் காணப்படும் காயம் அந்தளவுக்கு மோசமானதாக இருப்பதாக மருத்துவமனை வட்டாரங்கள் தெரிவித்தன.

குகநாதன் தாக்கப்பட்ட பாணி புதிய சந்தேகம் ஒன்றைத் தோற்றுவித்திருக்கின்றது. 2008 மே மாதம் 22 ஆம் திகதி கொழும்பிலிருந்து வெளிவரும் தி நேஷன் பத்திரிகையின் பிரதம ஆசிரியர் கீத் நொயார் கடத்தப்பட்டு கடுமையாகத் தாக்கப்பட்டார். இவர் மீதான தாக்குதலை மேற்கொண்டவர்கள் அவரது தலைப்பகுதியையே இலக்கு வைத்து தாக்குதலை நடத்தியிருந்தார்கள். இந்தத் தாக்குதலுக்கு கூரிய ஆயுதங்கள் அல்லது இரும்புக் கம்பி பயன்படுத்தப்பட்டிருந்தது. ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட இவர், பின்னர் அரசியல் அடைக்கலம் கோரி வெளிநாடு ஒன்றுக்குச் சென்றுவிட்டார். இதற்கு அடுத்த வருடம் 2009 ஜனவரியில் பிரபல ஊடகவியலாளரும் சன்டே லீடர் பத்திரிகையின் பிரதம ஆசிரியருமான லசந்த விக்கிரமதுங்க

கல்கிசைப் பகுதியில் வைத்துக்கொல்லப்பட்டார். அவர் பயணம் செய்த காரைத் தொடர்ந்துவந்த மோட்டார் சைக்கிள் நபர்களே அவரது காரை நடுவீதியில் மறித்து பலர் பார்த்திருக்கத்தக்கதாக லசந்தவைக் கொடூரமாகக் கொன்றார்கள். அவரது தலையின் பின்பகுதியில் கூரிய ஆயுதம் ஒன்றினால் குத்தியே அவர் கொல்லப்பட்டிருந்தார்.

இப்போது குகநாதன் மீதான தாக்குதலுக்கும் இதேபோன்ற கூரிய இரும்புக் கம்பி ஒன்றே பயன்படுத்தப்பட்டுள்ளது. குறிப்பிட்ட இரும்புக் கம்பி இன்னும் சற்று ஆழமாகப் பாய்ந்திருந்தால் சம்பவம் இடம்பெற்ற இடத்திலேயே குகநாதன் கொல்லப்பட்டிருப்பார் என யாழ்ப்பாணம் மருத்துவமனை வட்டாரங்கள் உறுதியாகத் தெரிவித்திருந்தன. இதனால்தான் குகநாதன் மீது நடத்தப்பட்டது வெறுமனே ஒரு தாக்குதல் அல்ல அது அவரைப் படுகொலை செய்வதற்காக நடத்தப்பட்ட நன்கு திட்டமிடப்பட்ட ஒரு முயற்சி என்பதை முன்னர் குறிப்பிட்டிருந்தேன். குகநாதன் மீது நடத்தப்பட்ட இரண்டாவது தாக்குதல் அவரது வயிற்றுப் பகுதியில் நடத்தப்பட்டிருக்கின்றது. அந்தத் தாக்குதலும் சற்றுத் தவறியதால் குகநாதன் பிழைத்துக்கொண்டார். யாழ்ப்பாணம் நாவலர் வீதியைத் தெரிந்தவர்கள் அது மிகவும் சனநெருக்கடியான, போக்குவரத்து அதிகமான பகுதி என்பதை அறிந்திருப்பார்கள். மக்கள் நடமாட்டம் அதிகமாக இருந்ததால் தாக்குதல் நடத்தியவர்கள் பதற்றப்பட்டு தமது இலக்கைத் தவற விட்டிருக்கலாம்.

இந்த இடத்தில் குகநாதனைக் கொல்ல வேண்டுமாயின் துப்பாக்கியைப் பயன்படுத்தியிருக்கலாமே என்ற கேள்வி உங்களுக்கு எழலாம். உண்மைதான். துப்பாக்கியைப் பயன்படுத்தினால் படையினர் அல்லாத தரப்பினரிடமும் ஆயுதங்கள் உள்ளன, அரசாங்கம் என்ன செய்கின்றது என்ற கேள்வி எழும். அத்துடன் கூரிய இருப்புக் கம்பியைப் பயன்படுத்தும் போது சத்தம் இல்லாமலேயே கனகச்சிதமாக காரியத்தை முடித்துவிடலாம். இதனைவிட இச்சம்பவத்தை தனிப்பட்ட ஒன்றாகவும் காட்டிக்கொள்ள முடியும். ஆக, கீத் நொயார் மற்றும் லசந்த மீதான தாக்குதல் பாணியிலேயே குகநாதனும் தாக்கப்பட்டிருப்பது பல கேள்விகளை எழுப்புகின்றது. முக்கியமாக தமக்கு வேண்டாத ஊடகவியலாளர்கள், சமூக செயற்பாட்டாளர்களைப் படுகொலை செய்வதற்கு விஷேடமாகப் பயிற்றுவிக்கப்பட்ட ஆயுதக் குழு ஒன்று அதிகாரத்திலுள்ளவர்கள் பயன்படுத்துகின்றார்களா என்பதுதான் அந்தக் கேள்வி! அதேவேளையில், இதில் தமிழ் ஆயுதக்குழுக்களின் சம்பந்தமும் உள்ளதாக சில தகவல்கள் தெரிவிக்கின்றன. தாம் அகப்பட்டால் தப்பித்துக்கொள்வதற்கான ஒரு உபாயமாகத்தான் இவற்றில் தமிழ் ஆயுதக்குழுக்களையும் சம்பந்தப்பட்டவர்கள் இணைத்திருப்பதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

அரசாங்கம் தமது அரசியல் மற்றும் அதிகாரத்தைத் தக்கவைத்துக்கொள்ளல் போன்ற தேவைகளுக்காக இவ்வாறான ஆயுதக்குழுக்களைப் பயன்படுத்துவது ஒன்றும் புதிதல்ல. போர் முடிவடைந்துவிட்டாலும், அதிகாரத்திலுள்ள சக்திவாய்ந்தவர்கள் தமக்குத் தேவையற்றவர்களைக் களத்திலிருந்து அப்புறப்படுத்துவதற்கு, தமக்கு எதிரான கருத்துக்களை ஒடுக்குவதற்கு இவ்வாறான குழுக்களைப் பயன்படுத்துவது தொடரத்தான் போகின்றது. குகநாதன் மீதான தாக்குதல் அதனைத்தான் உணர்த்துகின்றது. ஆக, போர் முடிந்துவிட்டது எனக் கூறிக்கொண்டாலும் ஊடகத்துறைக்கு மட்டுமன்றி கருத்துச் சுதந்திரத்துக்கும் அச்சுறுத்தல் மிக்க ஒரு நாடாகத்தான் இலங்கை இருக்கப்போகின்றது. இங்கு ஊடகசுதந்திரம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளதாக அரசாங்கம் கூறிக்கொள்கின்றது. ஆனால், நிலைமைகளைப் பார்க்கும் போது ஊடகசுதந்திரத்துக்கு அச்சுறுத்தல் விடுப்பவர்களுக்கான சுதந்திரம் உறுதிப்படுத்தப்பட்ட ஒரு நாடாகத்தான் இலங்கை இருக்கின்றது என்பதே உண்மை!

சஜீக்கா
அழகு நிலையம்
முகப் பொலிவு,
இமை முடி சீர் செய்தல்,
நக டிசைனிங், உடல் மசாஜ்,
ஆயுள் வேதம்,
தலைமுடிவெட்டுதல்,
முகப்பரு சிகிச்சை
திருமதி நவரூபன் சுகந்தினியின் நிர்வாகத்தில்
Sajeeka Beauty Parlour
Heinrichstr. 122, 8005 Zürich, Switzerland
Tel: 044 558 68 86 - Mobile: 079 853 50 48

# Orient Textiles and Jewellery

2011 ம் ஆண்டுக்கான புத்தம்
புதிய வர்ணங்களில் குந்தம்
வேலை செய்த கோலம்.
காஞ்சி காஞ்சிபுரம்,
கோலம் மற்றும் பல வகையான
முகூர்த்தப் பட்டுச் சேலைகள்.



சிறுவர்களுக்கான
ஆடைவகைகளையும்
பெற்றுக்கொள்ளலாம்.

உத்தரவாத முத்திரை பதித்த
தரமான தங்கமான தங்க
ஆபரணங்கள் தரமான தேர்வில்,
சிங்கப்பூர் விலையில்
விற்பனையானகின்றது.

உரிமையாளர்: S.ஜெகதீஸ்



Königswall 16 (Am HBF)
44137 Dortmund, Germany

Tel: 0231 16 23 77
Fax: 0231 14 78 36

165, Upper Tooting Road
Tooting, London SW177TJ, UK

Tel: 0208 6823958

# தமிழினம் மண்டியிடும் இனமில்லை என்பதை நிரூபித்து விட்டார்கள் ஈழத்தமிழர்கள்

அனலை நிதிஸ் ச. குமாரன்

தான் செய்த போர்க் குற்றங்களுக்காக உலகநாடுகள் ஓரணியில் இணைந்து தண்டனையைப் பெற்றுத்தந்துவிடுவார்களோ என்கிற மனப்பயம் மகிந்த ராஜபக்சாவை ஆட்கொண்டுள்ளது. இதன் காரணமாகவோ என்னவோ ஜுலை 23 அன்று வடக்கில் 20 சபைகளுக்கான உள்ளுராட்சித் தேர்தலை நடத்தியது இலங்கை அரசு. உள்ளுராட்சித் தேர்தலைக் காரணம் காட்டி தமிழ் மக்களை எப்படியேனும் சமாதானப்படுத்தி, உலக நாடுகளிடம் நற்பெயரை எடுப்பதன் மூலமாகப் போர்க் குற்றச்சாட்டுக்களை மூடி மறைக்க முற்பட்டார் மகிந்த ராஜபக்சா. தமிழினத்தையே கூண்டோடு அழிக்கவென இராணுவ பலத்தை அவர்கள் மீது ஏவிவிட்டது சிங்கள அரசு. தமிழினம் ஒன்றும் மண்டியிடும் இனமில்லை என்பதை நடந்து முடிந்த உள்;ராட்சித் தேர்தல் மூலமாக ஈழத்தமிழர்கள் நிரூபித்துவிட்டார்கள்.

தமிழர்களுக்கு இலங்கையில் எந்தவித அச்சுறுத்தலும் இல்லை என்கிற பிரச்சாரத்தை இத்தேர்தல் மூலமாகக் காண்பிக்கவும் மகிந்த அரசு முற்பட்டது. அத்துடன், தமிழர்களுக்கென்று அரசியல்ப் பிரச்சினை ஒன்றுமில்லை என்கிற வாதத்தை முன்வைத்து தான் செய்த இனச் சுத்திகரிப்பை மூடி மறைக்கலாம் என்றும் மகிந்த எத்தனித்தார். தமிழ் மக்கள் எப்பொழுதும் தனக்கு ஆதரவாகவே உள்ளார்கள் என்று பிரச்சாரம் செய்யலாமென மனப்பால் குடித்தார் மகிந்த. வெற்றிலைச் சின்னத்தில் போட்டியிட்ட ஆளும் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணி மூன்று (நெடுந்தீவு, வேலணை மற்றும் ஊர்காவற்றுறை) சபைகளில் மட்டுமே வெற்றி பெற்றது. குறித்த மூன்று பிரதேசங்களுக்கும் இதர கட்சிகளினால் பயணிக்க முடியாமல் அச்சுறுத்தல் விடப்பட்டதன் காரணமாகவேதான் இம் மூன்று சபைகளையும் தனதாக்கிக் கொண்டது ஆளும் கட்சி என்பது குறிப்பிடத்தக்கது.

யானைச் சின்னத்தில் போட்டியிட்ட பிரதான எதிர்க்கட்சியான ஐக்கிய தேசியக்கட்சி வடக்கில் எந்தவொரு சபையிலும் வெற்றிபெறவில்லை. வீட்டுச் சின்னத்தில் போட்டியிட்ட தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு 17 சபைகளின் நிர்வாகத்தைக் கைப்பற்றியது. மணிச் சின்னத்தில் போட்டியிட்ட மக்கள் விடுதலை முன்னணி (ஜே.வி.பி) எந்தவொரு ஆசனத்தையும் பெறவில்லை.

## அடக்குமுறைக்கு எதிராக வாக்களித்த ஈழத்தமிழர்கள்

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை வெற்றிபெறச் செய்ததன் மூலம் ஐக்கிய நாடுகள் சபையின் பரிந்துரையில் முன்மொழியப்பட்டுள்ள இலங்கை அரசாங்கத்தின் போர்க்குற்றங்கள் மற்றும் மனித உரிமை மீறல்கள் தொடர்பில் சுயாதீனமான சர்வதேச விசாரணைகளின் அவசியத்தை வழிமொழிந்துள்ளார்கள் ஈழத்தமிழர்கள். நடந்து முடிந்த தேர்தல் என்பது மிகவும் முக்கியமானதொன்றாகவே கருதப்பட்டது. ஐ.நா. சபையும் சர்வதேச சமூகமும், இலங்கை அரசாங்கம் போர்க்குற்றங்களை இழைத்திருக்கிறது எனவும் இது தொடர்பாக நீதியான விசாரணை தேவையெனவும் வற்புறுத்திவருகிறது.

சர்வதேச சமூகம் கொடுத்துவரும் இந்த நெருக்கடிகளிலிருந்து தப்புவதற்காக அரசாங்கம் உள்;ராட்சித் தேர்தல்களில் வென்று தமிழ் மக்கள் தன்பக்கம் என்று காட்டுவதற்காகப் பெரும்பாடுபட்டது.

அரச இயந்திரம் முழுவதையும் களமிறக்கி உள்;ராட்சித் தேர்தலை ஒரு யுத்தம் போல எதிர்கொண்டது. வேலைவாய்ப்புகளை வழங்குவதாக வெற்று வாக்குறுதிகளை அளித்தது. வேட்பாளர்களை எவ் விலைகொடுத்தேனும் வாங்க முயற்சித்தது. அவர்களை அச்சுறுத்தி தேர்தலிலிருந்து விலக வைக்க முயற்சித்தது. உளவியல் ரீதியான பீதியை ஏற்படுத்திப் பொதுமக்களை வாக்களிப்பில் கலந்துகொள்ளவிடாமல் தடுத்தது. வாக்காளர்கள் மீது கழிவு எண்ணெய் ஊற்றித் தாக்குதலும் நடத்தியது. .தென்னிலங்கையிலிருந்து பல குண்டர்களைத் தமிழர் பகுதிகளுக்குள் அனுப்பி, மக்களை துன்புறுத்தியது. வட பகுதிகளில் அமைந்திருக்கும் அனைத்து விடுதிகளும் இக்குண்டர்களினால் நிரம்பி வழிந்தது.

அரச இயந்திரம் முழுவதையும் களமிறக்கி உள்ளுராட்சித் தேர்தலை ஒரு யுத்தம் போல

எதிர்கொண்டது. வேலைவாய்ப்புகளை வழங்குவதாக வெற்று வாக்குறுதிகளை அளித்தது. வேட்பாளர்களை எவ் விலைகொடுத்தேனும் வாங்க முயற்சித்தது. அவர்களை அச்சுறுத்தி தேர்தலிலிருந்து விலக வைக்க முயற்சித்தது. உளவியல் ரீதியான பீதியை ஏற்படுத்திப் பொதுமக்களை வாக்களிப்பில் கலந்துகொள்ளவிடாமல் தடுத்தது. வாக்காளர்கள் மீது கழிவு எண்ணெய் ஊற்றித் தாக்குதலும் நடத்தியது. தென்னிலங்கையிலிருந்து பல குண்டர்களைத் தமிழர் பகுதிகளுக்குள் அனுப்பி, மக்களை துன்புறுத்தியது. வட பகுதிகளில் அமைந்திருக்கும் அனைத்து விடுதிகளும் இக்குண்டர்களினால் நிரம்பி வழிந்தது.

தமிழகத்தில் இடம்பெறும் தேர்தல்களின்போது வழங்கப்படும் அன்பளிப்புகளை மிஞ்சிவிடும் வகையில், அன்பளிப்புகள் வழங்கப்பட்டன. சேலைகள், வேட்டிகள், தையல் இயந்திரங்கள், தண்ணீர் இறைக்கும் இயந்திரங்கள் எனப் பல அன்பளிப்புகள் வழங்கப்பட்டன. அத்துடன், சனாதிபதியே முன்னின்று சில கட்டிட அடிக்கல் நாட்டுதலென்று தொடங்கி, பல தரப்பட்ட சலுகைகள் வழங்குவதுமாக இந்தத் தடவை தமிழர் பகுதிகளில் தேர்தல் இடம்பெற்றது.

தமிழர்களையே கூண்டோடு அழித்துவிட்டு சிங்கள மயமாக்க வேண்டுமென்கிற சிந்தனையுடைய மகிந்த ராஜபக்சா, ஏதோ தமிழர்களின் தாயகத்தை பொருளாதாரத்தில் சிறந்த பகுதியாக மாற்றப்போவதாக வாக்குறுதிகளை அளித்தார். தான் சந்திக்கும் அனைத்து பிரச்சினைகளுக்கும் முடிவுகட்ட ஒரே வழி தமிழர்களைத் தனது பக்கம் இழுத்து அவர்கள் மூலமாகவே அவருடைய பிரச்சினைகள் அனைத்தும் தீர்க்க எத்தனித்தார் மகிந்த ராஜபக்சா என்பது மட்டும் தெட்டத் தெளிவாக உணர முடிந்தது.

ஆனால் ஆசை வார்த்தைகளையும், அச்சுறுத்தல்களையும் பொருட்படுத்தாது தமிழ் மக்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை பெரும் வெற்றிபெறச் செய்துள்ளனர். வடக்கு கிழக்கு இணைந்த தமது தாயகத்தில் சகல அதிகாரங்களுடன் கூடிய அரசியல் சுயாட்சி வேண்டும் என்பதே தமிழ் மக்களின் கோரிக்கையாகவுள்ளது. எந்த சலுகைகளுக்காகவும், அச்சுறுத்தலுக்காகவும் தங்கள் அரசியல் அபிலாசையை விட்டுக்கொடுக்க மாட்டோம் என்பதை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை வெற்றிபெறச் செய்ததன் மூலம் மீண்டும் ஒருமுறை தமிழ் மக்கள் மூலம் மீண்டும் ஒருமுறை தமிழ் மக்கள் பிரகடனப்படுத்தியுள்ளனர்.

தமிழ் மக்களின் சனநாயக பூர்வமான தீர்வுக்குத் தலை வணங்கி இனிமேலும் காலம் தாழ்த்தாது அரசியல் தீர்வினை முன்வைக்க வேண்டும் என்று தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு அரசாங்கத்தை கேட்டுள்ளது.

“தமிழ் மக்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை வெற்றிபெறச் செய்ததன் மூலம் ஐக்கிய நாடுகள் சபையின் பரிந்துரையில் முன்மொழியப்பட்டுள்ள சிறிலங்கா அரசாங்கத்தின் போர்க்குற்றங்களுக்கும் மனித உரிமை மீறல்களுக்கும் பாரபட்சமற்ற சர்வதேச விசாரணை தேவையென்பதை ஏற்று வழிமொழிந்திருக்கிறார்கள்” என்று தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு வெற்றிபெற்றதன் பின்னர் அறிக்கைவாயிலாக தெரிவித்துள்ளது. “தமிழ் மக்கள் தமது தாயகத்தில் கௌரவமாகவும் சுதந்திரமாகவும் வாழ்வதற்கு ஏற்ற அரசியல் தீர்வைப் பெற்றுக்கொள்ளும் வகையில் அரசாங்கத்தை சர்வதேச சமூகம் தொடர்ந்தும் வற்புறுத்த வேண்டும்” என்றும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கேட்டுக்கொள்கின்றது என்றும் அந்த அறிக்கையில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

## மகிந்தாவின் பொய்ப் பரப்புரைகளுக்கு விழுந்த மரண அடி!

இந்த நூற்றாண்டின் மகா நடிகர் என்கிற பட்டத்தை மகிந்த ராஜபக்சாவுக்கு வழங்குவதே சாலச்சிறந்ததாக இருக்கும். மூன்று லட்சத்திற்கும் அதிகமான தமிழ் மக்களை முள்ளிவாய்க்காலுக்குள் கொலை செய்துவிட்டு அம்மண்ணுக்குள் புதைக்க ஆணையிட்ட மகிந்தா, தமிழர்களின் கலாச்சாரத் தலைநகரான யாழ்ப்பாணத்திற்குச் சென்று அந்த மக்களை தனது கட்சிக்கு வாக்குப் போடும்படி கேட்டார். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கும் பேச்சுக்களையும் பேசிவந்தார்.

“உங்களுடைய உரிமை உங்களிடமே இருக்கின்றது. அதனை யாரும் எடுத்துவிட முடியாது. அதில் கவனமாக இருங்கள். நான் சொல்வதைத்தான் செய்வேன்! செய்வதைத்தான் சொல்வேன்! என்னை நம்புங்கள்!” என வேலணையில் நடைபெற்ற பொதுமக்கள் சந்திப்பில் கலந்து கொண்ட மகிந்த ராஜபக்சா மக்கள் மத்தியில் தமிழ் மொழியில் தெரிவித்தார்.

தொடர்ந்து அவர் அங்கு உரையாற்றும் போது, “30 வருடங்கள் மக்கள் அனுபவித்து வந்த இன்னல்களும் துயரங்களும் இனி இல்லை.

யாரையும் சந்தேகப்பட வேண்டாம் யாருக்கும் பயப்பட வேண்டாம். போர் முடிந்து இரண்டு வருடங்களில் நாம் வடக்கின் அபிவிருத்திக்கு பெருமளவு செலவிட்டுள்ளோம். வடக்கின் அபிவிருத்தி துரிதகதியில் நடந்து கொண்டிருக்கின்றது. சிலர் மக்களைத் தொடர்ந்தும் தவறான வழியில் கொண்டு செல்ல நினைக்கின்றார்கள். இவர்கள் தங்கள் சொந்தங்களையும், சொத்துக்களையும், சுகங்களையும் வெளிநாடுகளில் வைத்து விட்டு இங்கே வந்து மக்கள் பற்றிப் பேசுகிறார்கள். இது பற்றி மக்கள் தெளிவாக விளங்கிக் கொள்ளவேண்டும். இந்த நாட்டைத் துண்டு துண்டாகக் கூறு போடுவதற்கு நான் ஒருபோதும் இடமளிக்கமாட்டேன். இது எங்கள் நாடு. நாங்கள் பிறந்த நாடு. நாங்கள் அனைவரும் ஒற்றுமையாக வாழும் நாடு" என்று தனதுரையை நிறைவு செய்தார்.

கோப்பாயில் இருக்கும் நாவலர் மகா வித்தியாலய மைதானத்தில் இடம்பெற்ற ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியின் தேர்தல் பிரசாரக் கூட்டத்தில் கலந்துகொண்டு, ராஜபக்சா தமிழில் உரை நிகழ்த்தினார். அவரது உரையில் மேலும் தெரிவித்ததாவது, "நான் அதிக பணம் செலவு செய்வது வட மாகாணத்துக்கே. எனது ஒரே இலக்கு வட மாகாணத்தின் அபிவிருத்தியே. உங்கள் பிரதேசம் முக்கியமாக கல்வியில் மீண்டும் சிறப்பாக வருவதற்காக நாங்கள் பாடுபட்டுக்கொண்டிருக்கிறோம். இனவாத அரசியல் இனி வேண்டாம். இனம், குலம் பார்த்து நான் வேலை செய்வதில்லை. ஏன் என்றால் நான் இந்த நாட்டின் தலைவன். நீங்கள் தவறான வழியில் வழிநடத்தப்படுகிறீர்கள் என நான் அறிகிறேன். இனிமேல் இந்த நாட்டில் பயங்கரவாதம் வேண்டாம். உங்கள் பிள்ளைகளின் எதிர்காலம் பற்றி இனி நீங்கள் யோசியுங்கள். நாம் அனைவரும் ஒரு கொடியின் கீழ் ஒன்றிணைவதன் மூலம் வளமான எதிர்காலத்தை அனுபவிக்க முடியும்" என்று கூறினார்.

கிளிநொச்சியில் நடைபெற்ற தேர்தல் பரப்புரை நிகழ்விற்கு தென்னிந்திய திரையிசைப் பாடகர்கள் மனோ, சுசித்திரா, கிரி' ஆகியோர் அழைக்கப்பட்டனர். 20-07-2011 நாளன்று கிளிநொச்சி மகாவித்தியாலயத்தில் இந்த நிகழ்வு நடைபெறவிருப்பதாக இராணுவம் யாழ்ப்பாணத்திலும், கிளிநொச்சியிலும் ஒலிபெருக்கிகளில் அறிவித்துவந்தது. இந்நிகழ்வில் மகிந்த ராஜபக்சாவும் கலந்துகொள்வதாக அறிவிக்கப்பட்டது. ம.தி.மு.க பொதுச்செயலாளர் வைகோ, பழ. நெடுமாறன் ஆகியோர் எதிர்ப்புத் தெரிவித்ததால் கிளிநொச்சியில் நடக்க இருந்த இசை நிகழ்ச்சிக்கு சென்றிருந்த பாடகர்கள், கொழும்பு விமான நிலையத்தில் இருந்து சென்னை திரும்பினர்.

வடமாகாணத்திலுள்ள உயர்பாதுகாப்பு வலையங்களை விரைவில் அகற்றி அப்பகுதிகளில் மீள்குடியேற்ற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுமென சாவகச்சேரியில் இடம்பெற்ற ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பின் தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் கலந்து கொண்டு உரையாற்றும் போது கூறினார் மகிந்த ராஜபக்சா. தன்னை பாதுகாத்துக்கொள்ளவே இப்படியாக அடுக்கடுக்காக வாக்குறதிகளைத் தமிழ் மக்களுக்கு வழங்குகின்றார் மகிந்த. சுனாமியின் போது வழங்கப்பட்ட உலக உதவிகள் இன்றுவரை தமிழ் மக்களுக்குக் கிடைக்கவில்லை. குறிப்பாக, உலக நாடுகளிடம் இருந்து பண உதவிகளை இலங்கை அரசு வேண்டி நிற்கிறது. உலக நாடுகளின் உதவியைப்பெற வேண்டுமாயின் தமிழர் பிரதேச அபிவிருத்தியென்கிற வாக்குறுதிகளையும், கட்டிட அடிக்கல் நாட்டும் நிகழ்ச்சிகளையும் நடத்தியாக வேண்டிய சூழ்நிலை மகிந்தாவுக்கு இருக்கிறது. ஒரு கல்லில் பல மாங்காய்களை வீழ்த்துவதென்கிற கருத்து மகிந்தாவின் செயலிற்கும் பொருந்தும்.

மகிந்த அரசின் கபடத்தன்மையையும், சட்ட சீர்கேட்டையும் மனிதநேயத்திற்கு எதிரான கொடூரத்தன்மையையும் எதிர்ப்பதற்கு தமிழ் மக்கள் ஒன்றிணைந்த சக்தியாக செயற்பட வேண்டிய அவசியத்தை பல தமிழ் அமைப்புக்கள் தேர்தலுக்கு முன்னர் வேண்டியிருந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. பல்லாயிரம் தமிழர்களைக் கொன்றுவிட்டு மடிப்பிச்சை கேட்டு தமிழரின் தாயகத்திலேயே மகிந்தா போன்ற அரக்கர்கள் செல்வது வெட்கக்கேடானது. இவர்களுக்கு தக்க பாடத்தைக் கொடுக்கும் சந்தர்ப்பமாகவே இந்த உள்ளூராட்சித் தேர்தலை தமிழ் மக்கள் பாவித்துள்ளார்கள் என்பது எவ்வித ஐயத்திற்கும் இடமில்லாமல் நிரூபிக்கப்பட்டுள்ளது.

மகிந்தாவின் அரசு புரையோடிப்போயிருக்கும் இனப்பிரச்சினைக்கான ஒரு நியாயமான நிரந்தரமான ஒரு தீர்வை ஏற்படுத்தத் தயாராக இல்லை என்பது மிகத்தெளிவான விடயம். போர் முடிந்து இரு வருடங்களுக்கு மேலாகியும் அரசு இனப்பிரச்சினைத் தீர்வுக்கான எந்த முயற்சியும் எடுக்கவில்லை.

1956-லிருந்தே தமிழ் மக்கள் சனநாயகரீதியில் தங்கள் முடிவினை ஒரே மாதிரி வெளிப்படுத்தி வருகின்றனர். எனினும் அரசுகள் இது தொடர்பில் உருப்படியான நடவடிக்கைகளை மேற்கொள்ளாததன் விளைவாகவே இன்றைய நிலை உருவாகியது. இதனை உணர்ந்து இனியாவது அரசு தமிழ் மக்களுக்கான உரிய தீர்வினை வழங்க முன்வரவேண்டும். கடந்த காலங்களில் இல்லாத அளவு இந்தத் தேர்தலில் அடாவடித்தனங்கள் இடம்பெற்றுள்ளன. எப்படியாவது வெற்றி பெற்று விடவேண்டும் என்று அரசு பல தந்திரங்களைக் கையாண்டது. ஆனால் மக்களின் மனங்களை அவர்களால் வெல்ல முடியவில்லை.

ஆட்சி அதிகாரம் பகிர்ந்தளிக்கப்படவேண்டும், தமிழ் மக்களின் பொருளாதார சமூகக் கலாச்சாரப் பண்பாட்டுச் செயற்பாடுகள் பேணப்படவேண்டும் என்ற செய்தியையே இந்தத் தேர்தல் முடிவுகள் தெரிவிக்கின்றன. இன்று சர்வதேசமும்கூட தமிழ் மக்களின் சனநாயக உரிமைகள் பேணப்படவேண்டும், சனநாயகம் மதிக்கப்படவேண்டும் என்ற செய்தியை வெளிப்படுத்தி வருகிறது. அரசிற்கும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கும் இடையிலான பேச்சு ஆக்கபூர்வமாக அமைய வேண்டும் எனவும் சர்வதேச சமூகம் வலியுறுத்தி வருகின்றது. அமெரிக்கா, பிரிட்டன், இந்தியா போன்ற நாடுகளும் இதனையே வலியுறுத்துகின்றன.

இந்தத் தேர்தலில் எப்படியாவது வெற்றிபெற்று தமிழ் மக்கள் தங்கள் பக்கம் இருக்கின்றனர் என்று சர்வதேசத்திற்குக் காட்ட அரசு முனைப்புடன் செயற்பட்டது. ஆனால் அரசின் போலித்தனமான நடவடிக்கைகளுக்கு மக்கள் அமைதியாக இருந்தவாறே தமது பதிலை வெளிப்படுத்திவிட்டனர். தமிழ் மக்களின் நம்பிக்கையை வீணடிக்காமல் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஆக்கபூர்வமான செயற்பாடுகளை மேற்கொள்ள வேண்டும். அத்துடன், மக்கள் வழங்கிய தீர்ப்பை மதித்தாவது மகிந்தாவின் அரசு தமிழ் மக்களுக்கு அதிகாரங்களை வழங்கி ஈழத்தமிழர்களின் 60 வருடங்களுக்கு மேலான போராட்டத்திற்கு முற்றுப்புள்ளி வைப்பாரா என்பதை பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.




Gopara Gnanam

என்றுமே வரலாறு
காணாத மலிவுவிற்பனை

திருமணம், பூப்புனித
நீராட்டுவிழா
போன்றவற்றிற்கான
அன்பளிப்பு பொருட்கள்
எம்மிடம் 100 முதல்
500 வரை என்றுமே
பெற்றுக்கொள்ள முடியும்.

Tel: 0231 54 500 28
Fax: 0231 54 500 48
Rheinische Str. 79, 81, 83
44137 Dortmund



# Lycamobile
# சுவீடன்



**தேசிய மற்றும் சர்வதேச நாடுகளுக்கான அழைப்புகள் 1 öre யில் இருந்து**

| | வீட்டு தொலைபேசி | கைத் தொலைபேசி |
|---|---|---|
| அவுஸ்ரேலியா | 0.01Kr /min | 1.89Kr /min |
| இலங்கை | 1.39Kr /min | 1.49Kr /min |
| இந்தியா | 0.39Kr /min | 0.39Kr /min |

| | வீட்டு தொலைபேசி | கைத் தொலைபேசி |
|---|---|---|
| கனடா | 0.39Kr /min | 0.39Kr /min |
| ஐக்கிய ராஜ்ஜியம் | 0.39Kr /min | 1.49Kr /min |
| சுவிட்ஸர்லாந்து | 0.39Kr /min | 2.49Kr /min |

**தங்களது தற்போதைய கைத்தொலைபேசி எண்ணை Lycamobile க்கு மாற்றி 100Kr பெறுமதியான நிமிடங்களை இலவசமாக பெற்றிடுங்கள்!**

*நிபந்தனைகளுக்கு உட்பட்டது.




Lyca mobile
Call the world for less

மேலதிக விபரங்களுக்கு

**www.lycamobile.se 0852 054977**

இணைப்புக்கட்டணமாக 99öre எல்லா சர்வதேச அழைப்புக்களுக்கும் அறவிடப்படும்.

*சலுகை கட்டணங்கள் கால வரையறைக்குட்பட்டவை. மேலதிக விபரங்களுக்கு www.lycamobile.se

Lycamobile வாங்கக்கூடிய இடங்கள்:





# என். எஸ். ஜுவலரி

# NS JEWELLERY & TEXTILES

உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்
நவீன உயர்தர டிசைன்களில்
நகைகளும், திருமண ஆபரணங்கள்,
ஓடர்நகைகள், திருத்த வேலைகள்
யாவும் செய்து கொடுக்கப்படும்.
தாலிக்குப் பொன்னுக்குதல், காது,
மூக்குக்குத்துதல் போன்ற நல்ல
காரியங்கள் செய்து கொடுக்கப்படும்.



**தாலி மற்றும் பொன்னுருக்குதல் இவையாவும் இங்கு செய்து தரப்படும்.**

ஒவ்வொரு வருடமும் தை
மாதம் எமது ஸ்தாபனத்தால்
தங்கநகை சேமிப்புத்திட்டம்
ஆரம்பிக்கப்படுகின்றது.
மாதம் 100CHF என 12 மாதம்
1200CHF. இணைய விரும்புவோர்
உங்களது பெயர்களை முன்கூட்டியே
பதிவுசெய்யலாம்.

Neugasse 58, 8005 Zürich, Switzerland
Tel: 044 440 60 50
Fax: 044 440 60 52
info@nsjewellery.com

# மகிந்த கொம்பனி போகுமா? சாகுமா?



இப்படிக் கேட்கிறது 02.08.2011 லங்கா காடியனில் வெளியான கட்டுரை.



இந்தப் படம் சனல் 4 எதிர்ப்பு அரங்கில் எடுக்கப்பட்டதாகக் கூறும் அக்கட்டுரை மகிந்தவின் பூர்வீகம் பற்றி இப்படிக் கூறுகிறது. மேலும் அக்கட்டுரை ஆசிரியர் திரு.சுப்பிரமணியம் மாசிலாமணி கூறுவதைத் தருகிறோம்.

குழந்தைகளுக்கான மன வைத்தியர்கள் மனித நடத்தைகளுக்கு சிறு பராய துன்ப அனுபவங்களைக் காரணமாகக் காட்டுகிறார்கள். எனக்கு 6-8 வயதாய் இருக்கும் பொழுது அயலில் ஒரு குடும்பம் இருந்தது. தகப்பன் நன்றாகக் குடித்து விட்டுத் தன் மனைவியைக் காரணம் நிறையச் சொல்லி எந்நேரமும் அடித்துக் கொண்டே இருப்பார். பின்னர் அவருடைய மூத்த மகன் அப்பிராணியான கன்றுக் குட்டியை அடிப்பதைக் கவனித்தேன். இந்நிகழ்வு என் மனதில் ஆழமாகப் பதிந்ததால் ராஜபக்ஷவின் நடத்தையைப் பார்க்கும் பொழுது மீண்டும் நினைவுக்கு வருகிறது.

என் வாழ்க்கையில் நடந்ததைச் சொல்கிறேன். ஒரு நாள் தற்செயலாக என் மகனை சிறு கைவண்டியால் மகனை அடித்தேன் 30 வருடங்கள் கழிந்த பின்னரும் அவன் அதை எனக்குச் சொல்லிக் காட்டுகிறான். நான் என்னதான் அன்பாகப் பழகி ஆதரவாய் நடந்தாலும் அவன் மட்டும் அதனை மறப்பதாய் இல்லை. பெற்றோர் அல்லது பேரப் பெற்றோர் ஆகிய நாம் எமது பிள்ளைகள் விடையத்தில் அதீத கவனமாய் இருக்க வேண்டும்.

மகிந்த ராஜபக்ஷ பல கொலைகளில் தொடர்பு உள்ளவராகச் சந்தேகிக்கப்படுகிறது. இது ஒரு தெரிந்த விடையம். பிரச்சனைகளைத் தீர்ப்பதற்குக் கொலையை ஏன் ஒரு வழியாகத் தெரிவு செய்கிறார்?

முரண்பாடுகளைத் தீர்க்கப் பல வழிகள் இருக்கின்றன என்பதில் அவர் இன்னமும் நம்பிக்கை கொள்ளவில்லை. எனவே இன்னமும் அவர் மக்களை கொலை செய்கிறார். இந்த நோய் தீவு அடங்கலும் பரவி விட்டது. அண்மையில் அங்கு போய்வந்த என் நண்பர் தான் அங்கு தங்கிய காலப்பகுதியில் குறைந்தது 5 பேர் கொல்லப்பட்டு கேள்வி முறை ஏதும் இல்லாமல் உள்ளது என்றார். மகிந்தரின் வாழ்வில் சூட்டி புத்தா(சின்னமகன்) என்றும் சண்டி மல்லி (செல்லத்தம்பி) என்றும் அவரது கட்டளைகளை நடத்தி முடிக்க இருக்கிறார்கள்.

கோத்தபாய ராஜபக்ஷ இனிமேல்தான் ஏதாவது கொலைகளுக்கான குற்றவாளியாகக் காணப்பட வேண்டும்.ஆனாலும் அவர் கொலைக்கான கட்டளைகளைப் போட்டார் என்பதற்கான நம்பகமான சாட்சியங்கள் உள்ளன. மகிந்தவுக்கும் கோத்தபாயாவுக்கும் சில ஒற்றுமைகள் உள்ளன. இருவரும் கொலையாளிகளைப் பயன்படுத்துவர். அப்படியென்றால் அவர்களின் குடும்பம் இது பற்றிய சேதி ஏதாவது சொல்கிறதா? அவர்களுடைய தந்தையார் டி.ஏ.ராஜபக்ஷ எப்போதாவது ஆட்கொலை செய்துள்ளாரா?

1970முதல் 1980 வரை இலங்கையில் இருந்த புத்த பிக்கு ஒருவரை நான் சந்தித்தேன். மகிந்த ராஜபக்ஷ தேர்தலுக்காக அம்பாந் தோட்டையில் இருந்து கெக்கிராவைக்கு தமது தேர்தல் பிரச்சாரத்துக்காக ஆட்களைக் கொண்டு வந்திருந்தார். அப்படிக் கொண்டு வரப்பட்டவர்களில் சிலர் இந்தப் புத்த பிக்குவுடன் தங்கி இருந்தபோது மகிந்த ராஜபக்ஷ தமது முதல் மனைவியை கொன்றவர் எனக் கூறினர். அம்பந்தோட்டையில் அதிகாரம் கொண்ட குடும்பம் என்பதால் தந்தையாருக்கு பொலிஸ், நீதவான் உட்பட ஒவ்வொருவரையும் தெரியும் என்பதால் வழக்கு மூடி மறைக்கப் பட்டுவிட்டது.

அவர்கள் எப்படி அதிகாரத்துக்கு வந்தனர் என்பதற்கு இவை ஒரு சில நிகழ்வுகள். இப்போதும் அவர்கள் பொலிஸ் இராணுவம் நீதித்துறை என்பவற்றைக் கட்டுப் படுத்துவதைக் காணலாம். சட்டம் ஒழுங்கை அமுலாக்கும் துறைகளே அவர்களது கட்டுப் பாட்டுக்குள் இருக்கின்றன.

கோத்தபாயா தமிழீழ விடுதலைப் புலிகள் பற்றியே பேசி வருகிறார், ஆனாலும் புலிகளை தோற்கடித்து விட்டோம் என்கின்றனர்.அவருடைய இப்போதைய பிரச்சாரம் புலிகள் பற்றித்தான் உள்ளது. ஆனால் நாங்கள் அப்பாவிக் குடிமக்கள் பற்றியும் சரணடைந்த போராளிகள் பற்றியுமே கவலை கொண்டுள்ளோம். அவர்கள் ஆயுதம் இல்லாத நிலையில் கொல்லப்பட்டு விட்டனர். அவருக்குத் தெரியும் தான் குற்றவாளி என்று. உலகத்துக்குத் தெரியும் அவர் குற்றவாளி என்று. தான் குற்றவாளி என்று உலகத்துக்குத் தெரியும் என்பதை அவரும் அறிவார்.

எனது ஆலோசனை என்னவென்றால் என்னதான் உண்மையில் நடந்தது என்றறிய ஒரு சுதந்திரமான விசாரணை வைப்போம். தாம் எதுவித தப்பும் செய்யவில்லை என்றால் மகிந்த ராஜபக்ஷவோ, கோத்தபாய ராஜபக்ஷவோ எதற்காகப் பயப்பட வேண்டும் என்றுதான் எனக்குப் புரியவில்லை. எனக்குத் தெரியும் இன்னும் பல சாட்சியங்கள் உள்ளன அவை கட்டம் கட்டமாக வெளியாக்கப்படும். அதன் நோக்கம் அவர்களாகவே தம்மைத் தாமே குற்றத்துக்குள் சிக்கிக் கொள்ளட்டும் என்பதே.

ஒரு கட்டத்தில் அவர்களுள் ஒருவரோ அல்லது மற்றவரோ குற்றத்தை ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயத்துக்கு தள்ளப்படுவர். அந்த ஒருவரோ அல்லது மற்றவரோ குற்றவாளி ஆக்கப்படுவதைக் காண்பர். அவர்கள் அந்தக் கட்டத்துக்கு இன்னமும் போக வில்லை. ஆனால் நம்பலாம் விரைவில் அவர்களை அங்கே காணலாம்.

2009 மே யில் தமிழ் மக்கள் என்ன நிலையில் இருந்தார்களோ அந்த இடத்தில் மகிந்த ராஜபக்ஷ எல்லாப் பக்கத்திலும் சுற்றி வளைக்கப் பட்ட எலிகள் முயல்கள் மரண பயத்தில் தவிப்பது போன்ற நிலையில் இருக்கிறார்.

நீதியின் சக்கரம் மெதுவாக ஆனால் நுண்ணிய மாவாக சுழன்று அரைக்கிறது. அமெரிக்காவில் வாட்டர் கேற் ஊழல் அமெரிக்க ஜனாதிபதி நிக்சனைப் பதவி விலகச் செய்ய பல மாதங்கள் பிடித்தது. ராஜபக்ஷ ராஜிநாமா செய்வாரா அல்லது தற் கொலை செய்வாரா?

ETR
European Tamil Radio

# 7வது ஆண்டில்

## 24மணி நேர வானொலிச் சேவை

ஐரோப்பியத் தமிழ் வானொலி

நிகழ்ச்சிகளுக்கான
தொலைபேசி இலக்கங்கள்:

Germany: 02381 97 25 560
Swiss: 032 510 38 25
France: 01 70 90 10 44
England: 020 70 43 10 55
Ca, Toronto: 416 900 36 53
Ca, Montreal: 514 228 37 52



Hotbird 13° - Freq: 11.200 (V) - S/R: 27500 - Fec: 5/6

www.etr.fm

Tel.: 00 49 (0) 23 81 95 66 09 - Fax: 00 49 (0) 23 81 97 25 556 - eMail: info@etr.fm

## பிரமாண்டமான... மூன்று காட்சி அறைகள்




தங்க நகைகளின் சமுத்திரம்

உயர்தர பட்டு ஆடைகளின் ஆலயம்

ரெடிமேட் ஆடைகளின் சிகரம்




# உங்கள் முல்கைம் P.S. பவான் அண்ணாச்சி

**Indische Textilien & Schmuck**

Tel : 0208-444 89 53 Mobil : 0172-2607388








உங்கள் வீட்டு அனைத்து மங்களகரமான நிகழ்வுகளுக்கும் 24 மணி நேரத்தில் வரும் அனைத்து உயர்தர ஆடைகளை வாங்கிட!

அத்துடன் அனைத்து எடைகளில் தாலிக் கொடிகள் உட்பட தங்க நகைகளும் பெற்றுக்கொள்ளலாம், அத்தனையும் இறக்குமதி செய்யப்பட்டவை

உங்கள் முல்கைம்

# P.S. பவான்

# அண்ணாச்சி கடை

Eppinghoferstr. 142,
45468 Mülheim an der Ruhr

**Tel : 0208 4448958 Fax : 0208 4447943 H.P : 01722607388**



இங்கிலாந்தில் இருந்து உள்நாட்டு வெளிநாட்டு அழைப்புக்களை மேற்கொள்ள மிக மலிவான கட்டணத்தில் உலகத் தரத்தில் முன்னணி வகிக்கும் ஒரே தொலைபேசி லைக்காமொபைல்

# Lycamobile
## ஐக்கிய ராஜ்ஜியம்



| | வீட்டு தொலைபேசி | கைத்தொலைபேசி |
|---|---|---|
| இந்தியா | 1p /min | 1p /min |
| மலேசியா | 1p /min | 5p /min |
| அவுஸ்ரேலியா | 1p /min | 16p /min |
| இலங்கை | 7p /min | 10p /min |
| நெதர்லாந்து | 5p /min | 19p /min |
| அமெரிக்கா | 4p /min | 4p /min |
| கனடா | 4p /min | 4p /min |
| சுவிட்சர்லாந்து | 5p /min | 20p /min |

தற்பொழுது உங்கள் Lycamobile லை மீள்நிரப்பும்பொழுது லைக்காமொபைலில் இருந்து Lycamobile லுக்கு இலவசமான குறுந்தகவல் சேவையும் இலவச அழைப்புக்களும் வழங்கப்படுகிறது.

£5 ⇨ இலவச அழைப்பு 100 நிமிடம் அல்லது 100 குறுந்தகவல் (SMS)
£10 ⇨ இலவச அழைப்பு 250 நிமிடம் அல்லது 250 குறுந்தகவல் (SMS)
£20 ⇨ இலவச அழைப்பு 500 நிமிடம் அல்லது 500 குறுந்தகவல் (SMS)
£30 ⇨ இலவச அழைப்பு 2000 நிமிடம் அல்லது 2000 குறுந்தகவல் (SMS)

**லைக்காவின் தரம் நம்மையெல்லாம் லைக்க வைக்கும் தரம்.**

மேலதிக விபரங்களுக்கு

**www.lycamobile.co.uk 0207 132 0322**

அனைத்து கட்டணங்களும் நிமிட கணக்கீட்டில் கணக்கிடப்படும். இலவச அழைப்புக்களும் குறுந்தகவல் சேவையும் விசேட விலைக்கழிவு நேரங்களிலும் மற்றும் மாதத்தில் இரண்டு மீள்நிரப்புதலுக்கும் மட்டுமே பொருந்தும் மீள்நிரப்பிய நாளிலிருந்து முப்பது நாட்களுக்கு மட்டுமே செல்லுபடியாகும். இலவச அழைப்புக்களும் குறுந்தகவல் சேவையும் பாவனையோ, காலாவதியோ முடிந்தால்லைக்காமொபைல் ப்ளஸின் வளமையான கட்டணமான ஒவ்வொரு அழைப்புக்கும் 7p சும் குறுந்தகவலுக்கு 9p சும் அறவிடப்படும்.

*கட்டணங்கள் மாறுதலுக்குட்பட்டவை.

Lyca mobile
Call the world for less

Lycamobile வாங்கக்கூடிய இடங்கள்:




Sainsbury's TESCO POST OFFICE PayPoint payzone epay Wilkinson Currys phones 4u BARGAIN BOOZE MORRISONS Aleef Budgens Costcutter